மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்னாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவை யான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

# நடைபாதை எனப்படும் நரகம்

## வள்ளுவர் கோட்டம் TO வாணிமஹால்

வள்ளுவர் கோட்டத்திலிருந்து வாணி மஹால் வரை உள்ள திருமலைப் பிள்ளை சாலையை எடுத்துக் கொள்ளுங்கள். இந்த சாலையில், மூன்று பள்ளிக்கூடங்கள், ஒரு திருமண மண்டபம் மற்றும் காமராஜர் நினைவாலயம் இருக்கின்றன. போதாததற்கு ஒரு அமைச்சரும் வசிக்கிறார். பல ரூட் பஸ்களும் கார்களும் விரையும் முக்கிய இணைப்புச் சாலை. அதில் நடைபாதையின் நிலையைப் பாருங்கள்!

காமராஜ் நினைவாலயம் பஸ் ஸ்டாப் பக்கத்தில் நடைபாதையோடு நடந்து வந்தால் இந்த மின்வாரியப் பெட்டியில் முட்டிக் கொள்ள வேண்டியதுதான். அதைச் சுற்றி வளைத்துக் கொண்டு போனாலும் மறுபடி நடைபாதையில் கால் வைக்க முடியாத நிலை.

அமைச்சர் வீரப்பன் வீட்டுக் காம்பவுண்டையொட்டி நடைபாதையில் கல்லும் மண்ணும் குவிந்து கிடக்கும் காட்சி.



— இல்லப்பா

படங்கள்: எட்வர்ட் (சுபா)

பல்லாவ்லா சாலை சந்திக்கும் இடத்தில் — விபத்துக்கு அழைப்பு விடுக்கும் திறந்த பாதாளச் சாக்கடை; கல்லும் கட்டியும் குவிந்து கிடக்கும் நடைபாதை.

நடைபாதை இப்படி இருந்தால் நடப்பது எங்கே?





ராஜம்மாவுக்கு வயது சுமார் நாற்பது இருக்கலாம். தனியார் நிறுவனம் ஒன்றில் பணி புரியும் ராஜம்மா, தாம்பரத்திலிருந்து தினசரி வர வேண்டும். அலுவலகத்தில் சும்மா வந்து உட்கார்ந்து கொண்டுவிட்டால் மட்டும் போதாது; வேலையும் செய்தாக வேண்டும். அவளால் முடியவில்லை. காரணம்—

அபார்ஷன். அடிக்கடி அபார்ஷன்.

கருத்தடை மாத்திரைகள், கருத்தடைச் சாதனங்கள் எத்தனையோ இருக்க, எதற்கு இப்படி மனைவியை ஒவ்வொரு முறையும் துன்புறுத்தி வதைக்க வேண்டும்?

கருத்தடை செய்து கொண்டு விட்டால் அப்புறம் இயற்கையாக இருக்க வேண்டிய தாம்பத்ய சுகம் இல்லாது போய்விடுமோ என்ற கணவனின் தவறான கருத்துத்தான் இதற்குக் காரணம்.

ராஜம்மா, மூன்று, நான்கு மாதங்களுக்கு ஒரு முறை 'வயிற்றைக் கழுவிக் கொண்டு வர வேண்டும். அதன் அதிர்ச்சி, சோர்வு எல்லாம் அவளைப் பிடித்தாலும், ஆபீசுக்கு மட்டும் தவறாமல் போய் அவள் சம்பாதித்துக் கொண்டு வரவும் வேண்டும். வீட்டிலும் வேலை செய்ய வேண்டும்...

'எத்தனை நாளைக்கு இந்த வேதனை!' என்று ராஜம்மா தவித்துக் கொண்டிருப்பது, பல பெண்களில் ஒரு உதாரணம்தான்.

### நிசப்தக் கூச்சல்!

ராஜம்மாவுக்கு ஏற்படுகிற மன வேதனை, உடல் வேதனை ஒருபுறம் இருக்கட்டும். அவள் வயிற்றிலே வளர்ந்து பிறகு சிதைக்கப்படும் சிசு எவ்வளவு வேதனை அடையும் என்று யாரும் சிந்தித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை — சமீப காலம் வரை.

அண்மையில் தான் அமெரிக்காவில் ஒரு அபார்ஷனின் போது வெளியேற்றப்படும் கரு எத்தனை துடிக்கிறது என்பதைப் படம் பிடித்துக் காட்டினார்கள். இதனைச் சாதாரண காமிராவினால் படம் பிடிக்க முடியாது என்பதால் அல்ட்ரா ஸவுண்ட் என்கிற முறையில் படம் பிடித்தார்கள். இந்த முறைப்படி அதிகமான அதிர்வுகள் கொண்ட ஒலி அலைகள் ஒளிக்கதிராகமாற்றப்பெற்றுபடம்ஃபிலிமில் பதிவாகிறது. இந்த முறையில் படம் பிடித்த போது மூன்று மாதக் கருவானது அபார்ஷன் செய்யும் டாக்டருடைய உபகரணங்களிலிருந்து தப்பித்து நழுவ முயன்று அந்த முயற்சியில் தோல்வி அடைந்து விடுகிற பரிதாபத்தைப் பார்க்க முடிந்தது!

இந்தப் படத்தை அமெரிக்க ஜனாதிபதி ரேகன் பார்த்தார். அவர் எப்போதுமே அபார்ஷனைத் தடுக்கச் சட்டம் வரவேண்டும் என்று நினைப்பவர். ஆனால் அமெரிக்க நாடாளு மன்றமான காங்கிரஸில் போதிய ஆதரவில்லாததால் அவரால் ஏதும் செய்ய முடியவில்லை. ''இந்தப் படத்தை ஒவ்வொரு காங்கிரஸ் உறுப்பினரும் பார்க்க வேண்டும்; அவர்கள் மனம் மாறி என் கொள்கைக்கு ஆதரவு தருவார்கள்'' என்கிறார் ரேகன்.

''வாயில்லாப் பூச்சியை நசுக்குவது போலத்தான் கூச்சலிட முடியாத கருவைக் கொல்வதும்'' என்ற பொருள்பட **The Silent Scream** என்று இந்தப் படத்துக்குப்

# மௌனிக்கப்படும்



• அபார்ஷன் இனிவிக்



• நிசப்தக் கூச்சலில் கரு

பெயர் கொடுத்தார்கள், இதனைத் தயாரித்தவர்கள். ''மனிதன் புரியக் கூடிய வன்முறைக் காரியங்களெல்லாவற்றுக்கும் சிகரமானது அபார்ஷன்'' என்கிறார் இதனைத் தயாரித்த டாக்டர் நாதன்சன். ஒரு காலத்தில் அமெரிக்காவிலேயே மிகப் பெரிய அபார்ஷன் கிளினிக் நடத்தியவர் இவர். பத்து ஆண்டுகளாக மனம் மாறிவிட்டார்.

அபார்ஷன் ஆதரவாளர்கள் வேறு விதமாகப் பேசுகிறார்கள். ''மூன்றுமாதக் கருவின் நரம்புகளும் மூளையும் வலியை உணரக் கூடிய அளவு வளர்ச்சி அடைந்திருக்காது. எனவே அது வலியை உணரும் என்றும், அபார்ஷன் கருவியிடம் சிக்காமல் தப்ப முயலும் என்றும் கூறுவது அபத்தம்'' என்கிறார்கள். ''இந்தப் படம் விஞ்ஞானப் பூர்வமானது அல்ல. கலங்கலாகத் தெரிகிறது. மேலும் பின்னணியில் பேசுகிறவர் உணர்ச்சிவசப்பட்டு வசனம் பேசி உள்ளத்தை உருக்க முயல்கிறார். இது யதார்த்த நோக்கு ஆகாது.''



* டாக்டர் ரவீந்திர பத்மநாபன்

### மருத்துவத் துறையில் மோதல்

மருத்துவத் துறையிலேயே அபார்ஷன் ஆதரவாளரும், எதிர்ப்பாளரும் கருத்து மாறுபட்டு மோதிக் கொள்கிறார்கள். இன்னும் நீண்ட காலம் விவாதம் நடக்கும் என்றாலும் அமெரிக்காவில் அபார்ஷனுக்கு எதிராக மக்களின் சக்தி திரண்டு வருகிறது. சமீபத்தில் 70,000 மக்கள் ஒரேயிடத்தில் கூடி கருவுக்கு ''உயிர் வாழ உரிமை உண்டு'' என்று ஆர்பாட்டம் நடத்தினார்கள். அதன் பிறகு ரேகன் அவர்களிடையே சொற்பொழிவாற்றினார்.

* * * * *



குழந்தை பெற்றுத் தரும் அம்மாக்களின் சங்கம் தோன்றியிருக்கிறது!

# பல கொலைகள்

நமது நாட்டில் அபார்ஷன் சட்ட பூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. இது பலருக்கு இன்னும் தெரியாது. ஏதோ குற்றம் செய்வது போல நினைத்துக் கொண்டு டாக்டரிடம் போக பயந்து போலிகளிடம் போகிறார்கள்.

சென்னை எழும்பூர் மருத்துவ மனையில் அபார்ஷன் கேர் கிளினிக் இயங்குகிறது. சராசரியில் எட்டு, ஒன்பது அபார்ஷன்கள் செய்யப்படுகின்றன ஒரு நாளைக்கு. எல்லா மாவட்டத் தலைமை மருத்துவ மனைகளிலும் அபார்ஷன் கேர் கிளினிக்குகள் இயங்குகின்றன.

அபார்ஷனில் ஆபத்துக்கள் உண்டு. அனஸ்தெடிக் எனப்படும் மயக்க மருந்து ரிஸ்க் ஒன்று; இருமித் தொத்து எனப்படும் இன்ஃபெக்ஷன் மற்றொன்று; அபரிமித ரத்தப் போக்கு மூன்றாவது. போலிகளிடம் போகும் போது ஆபத்து அதிகரிக்கிறது. தவிர ராஜம்மா மாதிரி அடிக்கடி அபார்ஷனுக்கு உட்படும்போது கருப்பை பலவீனமாகி அதனால் வேறு கோளாறுகள் வரக் கூடும்.

## மக்கள் தொகை பெருக்கம்

இதையெல்லாம் சொல்லப் போனால் சில டாக்டர்கள் "ஆபத்து எதில் தான் இல்லை? ரயில் பயணத்தில் விபத்து இல்லையா? அதற்காக ரயிலிலேயே போகாமல் இருந்து விடுகிறோமா?" என்கிறார்கள்.

டாக்டர் ரவீந்திர பத்மநாபன் கூறுகிறார்: "அபரிமிதமான செல்வமும், உயர்வான வாழ்க்கைத் தரமும் உள்ள சூழ்நிலை அமெரிக்காவில். அதனால் ரேகன் கண்ணை மூடிக் கொண்டு சொல்லிவிடலாம் அபார்ஷன் எதிர்ப்பு சரியானதே என்று. இங்கே...?

"எத்தனை மோசமான வாழ்க்கைத் தரம்! இன்றைக்குத் தேசிய அளவில் மிகக் கடுமையான, கவலை தரும் சூழ்நிலை மக்கள் தொகைப் பெருக்கம்தான். நம்முடைய வளர்ச்சி விகிதத்தை அலங்கோலப்படுத்துவதே நமது ஜனப் பெருக்கம்தான். இந்தச் சூழ்நிலையில் கருக் கலைப்பு தவறு என்று சொல்லுவதே முட்டாள்தனம். அங்கே "சைலண்ட் ஸ்க்ரீம்' நியாயமானதாகப் படலாம். இங்கே அது சுத்த அபத்தம். பேத்தல். கேட்கிற இரைச்சலுக்கும், கேட்காத கூச்சலுக்கும் இடையே எதை நீங்கள் தேர்ந்தெடுக்கப் போகிறீர்கள் என்பதுதான் இப்போது கேள்வி. உருவாகி வளர்ந்து கூச்சலிடப் போகும் லட்சக் கணக்கான உயிர்களை விட, உருவாகாத நிலையிலுள்ள கருவை அழிப்பதே மேல்! மேலும் அந்தக் கரு வளர்ந்து ஆளாகி வறுமையில் துன்பப்பட அனுமதிப்பது மட்டும் எப்படி தர்ம நியாயமாகும்?"

வறுமை, ஜனத்தொகைப் பெருக்கம் என்ற முறையில் பார்க்கும் போது டாக்டர் கூறுவது நியாயமே என்றாலும் 'குடும்பக் கட்டுப்பாட்டுக்கு வேறு எத்தனையோ முறைகள் இருக்க அபார்ஷனுக்கு அனுமதி அளிக்கத் தான் வேண்டுமா?' என்ற கேள்வி எழுகிறது.

## ஆணின் சுயநலம்

அடிப்படையில் பார்க்கப் போனால் இதற்கெல்லாம் காரணம் ஆண் மகனின் சுயநலம்தான். கருத் தடை ஆபரேஷன் செய்து கொள்ளவோ நிரோத் போன்ற கருத்தடை சாதனத்தை உபயோகிக்கவோ விரும்பாத சுயநல ஆண்மகன் பெண்ணை சகல விதத்திலும் துன்பத்திற்கு ஆளாக்குகிறான்.

பெண்களுக்கான கருத்தடை ஆபரேஷனும் சரி, லூப் போன்ற கருத்தடை முறைகளும் சரி, அபார்ஷனும் சரி, எல்லாமே ஆபத்து மிக்கவை.

கருப்பையில் விட்டு வைக்கப் படுகிற லூப்போன்ற சாதனத்தினால் அமெரிக்காவில் 90,000 பெண்மணிகள் இடுப்பு நோய் கண்டு மலடுகளாகி விட்டனர் என்று ஒரு மருத்துவ அறிக்கை கூறுகிறது. மேலும் ரத்தக் கசிவு, ஏன் புற்று நோய் ரிஸ்க் கூட இருப்பதாகக் கருதப்படுகிறது.

எனவே கருத்தடை என்ற நோக்கில் பார்த்தால் அபார்ஷனுக்கு அனுமதி அளிப்பது மட்டுமன்றி பெண்களைத் துன்பத்தில் ஆழ்த்தும் இதர முறைகளும் நல்லதல்ல. ஆண்மகன் கருத்தடை சாதனம் பயன் படுத்துவதோ அல்லது கருத்தடை ஆபரேஷன் செய்து கொள்வதோதான் எளிது; ஆபத்து இல்லாதது—அல்லது மிக மிகக் குறைவான ரிஸ்க் உடையது.

## கம்சத்தனங்கள்

அபார்ஷன் போன்ற கம்சத்தனங்களை நாகரிக வளர்ச்சியாகக் கருதி அனுமதி வழங்கப் போக வேறு பல அநாகரிகங்களும் வளர்ந்துவிட்டன. 'விந்துவங்கிகள்' தோன்றி விட்டன. முகம் தெரியாத ஆண்மகனின் விந்துவைத்தன் கருப்பையில்தாங்கி குழந்தை

பழங்கால 'கறுப்பு — வெள்ளை' திரைப்படங்களை, வண்ணப்படமாக் மாற்றும் ஆற்றலை இப்போது விஞ்ஞானம் அடைந்திருக்கிறது. 'அமெரிக்க' நிறுவனம் ஒன்று இதைக் கண்டுபிடித்துள்ளது! ஒரு எலக்டிரானிக் 'ஸ்கேனர்' கறுப்பு — வெள்ளை பிலிமின் ஒவ்வொரு 'ஃபிரேமை'யும் சுமார் 5 லட்சம் புள்ளிகளாக மாற்றி கம்ப்யூட்டரில் பதிவு செய்கிறது! ஒரு 'ஆர்ட் டைரக்டர்' ஒவ்வொரு 'பிரேம்'மையும் பார்த்து, அதில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு 'கலர்' கொடுக்கிறார்! கொடுத்துவிட்டால் போதும், அந்தப் பொருள் அப்படம் முழுதும் எந்த இடத்தில் வந்தாலும், அதே கலரை அதற்குக்கொடுத்து விடுகிறது கம்ப்யூட்டர்! அதனால் ஆர்ட் டைரக்டர் ஒரு பொருளுக்கு ஒரு தடவை மட்டும் கலர் தந்தால் போதும். மற்றவற்றை கம்ப்யூட்டர் பார்த்துக் கொள்ளும். இதற்கு ஆகும் செலவு சுமார் 15 லட்ச ரூபாய்!

எம். ஜி. எம். நிறுவனம், இம்முறையில், தனது பழைய வெற்றிப் படைப்புக்களை வண்ணப்படங்களாக மாற்றி வருகிறது.

ஆதாரம்: மிர்ரர்; சம்பத்குமாரி.



"ஏன், பேச்சாளர் பேசறதுக்கு முன்னாடி சட்டைப் பொத்தானையெல்லாம் கழட்டறாரு?"

"தலைவரை அவர் மனம் திறந்து பாராட்டப் போறாராம், அதனால் தான்."

—ஏ. ரஞ்சனி.





வருமானவரி 'கணக்குக் காட்டும்போது 'பம்பாய் மௌரைன் இஞ்சினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட்' எனும் கம்பெனி, 7 லட்ச ரூபாய் செலவுக் கணக்குக் காட்டியுள்ளது! இந்த 7 லட்ச ரூபாய் கமிஷனாகவும், லஞ்சமாகவும் தரப்பட்டது என்றும் அதற்கு வருமான வரி விதிக்கப்படக்கூடாது என்றும் கூறுகிறது இந்நிறுவனம்!

— ஆதாரம்: 'ஸண்டே'; சம்பத்குமாரி.



மிகக் கூர்மையாக இருக்க விரும்பாதீர்கள்; உங்களையே வெட்டிக் கொள்வீர்கள்.

முழுவதும் சர்க்கரையாக இருக்க விரும்பாதீர்கள்; உலகம் உங்களை விழுங்கி விடும்.

முழுக்க முழுக்க எட்டிக்காயாக இருக்க விரும்பாதீர்கள்; உலகம் உங்களை உமிழ்ந்து விடும்!

— பாரசீக பழமொழி

— கோவி. ராஜேந்திரன்.

பெற்றுத் தரும் அம்மாக்களின் சங்கமே இயங்கி வருகிறது. இந்த முறை, குழந்தை பெற முடியாத தம்பதிகளுக்கு உபயோகமாக இருக்கும் என்று கருதப்படுகிறது — ஒருபுறம். மறு பக்கத்தில் மேதைகளின் விந்தைச் சேகரித்து ''மேதைக் குழந்தைகளை'' உருவாக்கப் போகிறேன் என்று ஆரம்பிக்கிறார் வேறு ஒருவர்! மேதைகளுக்கு முட்டாள்களும் பிறப்பதுண்டு என்பதை ஏனோ இவர்கள் மறந்து போகிறார்கள்.

செயற்கைக் கருத்தரிப்பு, அபார்ஷன் இவையெல்லாம் எங்கு கொண்டு விட்டிருக்கின்றன என்று பார்த்தால் மனம் திடுக்கிடுகிறது!

செயற்கை கருத்தரிப்பு முறையில் பெண்மணியின் ஒருமுட்டையையன்றி பலமுட்டைகளை ஒரே சமயத்தில் கருத்தரிக்கச் செய்கிறார்கள். பிறகு ஒன்றை மட்டும் தாயின் உடலில் விட்டு வைத்து விட்டு மற்றவற்றை வெளியே எடுத்து விடுகிறார்கள். இப்படி எடுக்கப்படும் கருவுக்கு உயிர் இருக்கிறது. அதனைச் செயற்கை முறையில் தொடர்ந்து உயிரோடு வைத்திருக்கிறார்கள். பிறகு அதில் மருத்துவப் பரிசோதனைகளைச் செய்கிறார்கள்! புற்று நோய்க்கான பரிசோதனைகளைக் கூடச் செய்கிறார்கள்! பரிசோதனைச் சாலையில் எலி, முயல், குரங்கு போன்ற மிருகங்களை வைத்து மருத்துவ பரிசோதனைகள் செய்வது போல் இந்தக் கருக்களை — சின்னஞ்சிறு ''குழந்தைகளை'' — வைத்து மருத்துவப் பரிசோதனைகளை நடத்துகிறார்கள். எப்படிப்பட்ட பயங்கரக் கொடுமை இது?

## எப்போது நியாயம்?

ஒரு ஹைஸ்கூல் மாணவி, பரீட்சைக்குப் படிக்கப் போன இடத்தில், கூடப் படிக்கும் மாணவனிடம், உணர்ச்சி வசப்பட்டுத் தன்னை ஒரு சந்தர்ப்பத்தில் இழந்து விட்டாள். அவள் பெற்றோர் கதறினார்கள். பெண் தெரியாத்தனமாகச் செய்து விட்ட பிழையை உணர்ந்து வருந்தினாள். அவளை அப்படியே விட்டு விட்டால் அவள் வருங்காலம் எப்படி இருக்கும்? அவள் மன நிலை எப்படி பதைக்கும்? பெற்றோரிடம் அபார்ஷன் செய்து விடுவதுதான் சரியானது என்று எடுத்துச் சொன்னபோது, மகளின் வாழ்க்கையைப் பாழடிக்காமல் இருக்க ஒப்புக் கொண்டார்கள். அபார்ஷன் செய்து அவளைக் காப்பாற்றி விட்டதில், அவளது வருங்காலத்தைப் பாழாக்காமல் தடுத்து விட்டதில் ஒரு மன நிம்மதியும் மகிழ்ச்சியும் கிடைத்தது. அபார்ஷன் செய்யாமல் விட்டிருந்தால் அந்த மாணவியின் கதி என்ன என்பதை யோசித்துப் பாருங்கள்.

இம்மாதிரியான சந்தர்ப்பத்தில் அபார்ஷன் ஒருவேளை நியாயமானதாக இருக்கலாம். ஆனால் அதைத் தெருவுக்கு இரண்டாக வளரும்கிளினிக்குகளில்கிடைக்கச்செய்வது சமுதாயச் சீர்குலைவுக்கே வழி வகுக்கும்.

— சாருகேசி; ஜெயந்தி.



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள். சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

# "என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்!..

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப் படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் கால கட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்.

---

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாது காப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கட–மான வேலைதான்!**

---

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்–காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு... போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடிதுடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருககிறது... படிப்பு விஷயத்திலும் சரி, இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்

தனியாகவும் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ 10 உள்ள பேக்கில்

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற முகத்தான வசதி.*

Johnson & Johnson

OBM/5070/TAM

## எதிர்காலம் உங்கள் கையில்

# ஸ்டேஷன் மாஸ்டர் ஆக வேண்டுமா?



"இந்தியாவின் மற்றெந்த நிர்வாகத்தையும் விட ரயில்வே நிர்வாகம்தான் மிக அதிக அளவில் வேலை வாய்ப்பு அளிக்கிறது" என்கிறார் சென்னை ரயில்வே ரெக்ரூட்மெண்ட் போர்டின் சேர்மன்.

இந்தியா முழுவதிலுமாக இது போன்ற போர்டுகள் மொத்தமாய் பதினாறு. இவை ரயில்வே போர்டின் கீழ் செயல்படுகின்றன. ரயில்வே போர்டு, இந்தியா முழுவதும் ஒரே தினத்தில் பரீட்சைகளை நடத்துகிறது.

"பாபுலர் கேடகிரி" என்று ஒன்று. ஆபீஸ் கிளார்க், கமர்ஷியல் கிளார்க், ரயில் கிளார்க் என்கிற குமாஸ்தா வகையறுக்கள் இதில் அடங்கும். குறைந்த பட்ச கல்வித் தகுதி பள்ளி இறுதி வகுப்பு. வயது வரம்பு 18—25.

அடுத்த பிரிவு "சென்ஸிடிவ் கேடகிரி". இதில் துணை ஸ்டேஷன் மாஸ்டர், டிராஃபிக் மற்றும் கமர்ஷியல் அப்பரண்டிஸ்கள், முதல் கிரேடு கிளார்க்குகள் என்பன வரும். குறைந்த பட்சம் டிகிரி வாங்கியிருக்க வேண்டும். துணை ஸ்டேஷன் மாஸ்டருக்கு வயது வரம்பு 18—25. மற்றவற்றுக்கு 18—28.

துணை ஸ்டேஷன் மாஸ்டருக்கு விண்ணப்பிக்கக் கண்ணாடி அணிந்தவர்கள் தகுதியில்லை. தவிர இவர்களுக்குக் கடுமையான (கிளார்க்குகளுக்கு அவ்வளவு இல்லை) மெடிகல் டெஸ்ட்டும் உண்டு. இவர்களிடம் உடல் நலக்குறைவு இருந்தால், அது பெரிய விபத்துக்களுக்கு காரணமாகிவிடுமில்லையா?

ஸ்டெனோகிராபர், டைப்பிஸ்ட்டுக்களுக்கும் நிறைய வாய்ப்பு இருக்கிறது. ஸ்டெனோகிராபர்களுக்கு சுருக்கெழுத்தில் நிமிடத்துக்கு 80 வார்த்தை எழுதும் திறமையும், டைப்பிஸ்ட்டுகளுக்கு நிமிடத்துக்கு 30 வார்த்தைகள் டைப் அடிக்கிற திறமையும் இருக்க வேண்டும். வேலை கிடைத்ததும் அதிகத் திறமை உள்ளவர்களுக்கு அதற்கேற்ப இன்கிரிமெண்ட் உண்டு.

அநேகமாக ஆண்டுதோறும் நவம்பர், டிசம்பரில் செய்தித்தாள்களில் விளம்பரம் வரும். விண்ணப்பிக்க ஒரு மாதம் அவகாசம் தருவார்கள். ஃபீஸ் ரூ 12 போஸ்டல் ஆர்டர் மூலமாகக் கட்ட வேண்டும். தாழ்த்தப்பட்ட பிரிவினருக்கு சலுகையாய்க் கட்டணம் ரூ 3 மட்டுமே. முன்னாள் ராணுவத்தினருக்குக் கட்டணமில்லை. உடல் ஊனமுற்றவர்களுக்கு, வயது வரம்பில் சலுகை காட்டுகிறார்கள்.

விண்ணப்ப ஃபாரத்துடன் மூனு பாஸ்போர்ட் சைஸ் போட்டோக்கள், பிறந்த தேதிக்கான சான்றிதழ், கல்வித் தகுதிக்கான சான்றிதழ், தவிர ஜாதி முதலியன சம்பந்தமாய் ஏதேனும் சலுகைகள் பெறும் பட்சத்தில் அதற்கான அத்தாட்சி, இவற்றுடன் இரண்டு சுய விலாசமிட்ட தபால் தலை ஒட்டிய கவர்கள் எல்லாம் அவசியம் அனுப்ப வேண்டும்.

இவையெல்லாம் தவிர, ஆண்டு தோறும் குறைந்த எண்ணிக்கையில் ஹெல்த் இன்ஸ்பெக்டர்கள், ஃபார்மஸிஸ்ட், ஸ்டாஃப் நர்ஸ் (பெண்களுக்கு மட்டும்) போன்ற பதவிகளுக்கு சிலர் நியமிக்கப்படுகிறார்கள்.

மேலும் இஞ்சினியரிங் படிப்பில் டிப்ளமா, மற்றும் டிகிரி வாங்கினவர்களுக்கும் ப்ளஸ் ஸிவில் இஞ்சினியரிங் பிரிவில் டெக்னிகல் டிராயிங் படித்தவர்களுக்கும், பி. எஸ். ஸி. யில் கெமிஸ்ட்ரி, பிஸிக்ஸ் படித்தவர்களுக்கும் (முறையே கெமிகல் அஸிஸ்டெண்ட், டெலிகம்யூனிகேஷன் இன்ஸ்பெக்டர் பொறுப்புக்களுக்கு) வேலைக்குச் சான்ஸ் இருக்கிறது.

தேர்வு முறை எப்படி?

விண்ணப்பிக்கும் பிரிவுக்கேற்ப முழுக்க முழுக்க அப்ஜெக்டிவ் டைப்பிலும் கட்டுரை எழுதுகிறதாகவும் இருக்கலாம்; அல்லது முழுக்க முழுக்க டிஸ்கிரிப்டிவ் டைப்பாக இருக்கலாம்; இல்லையெனில் இரண்டும் கலந்ததாகவும் இருக்கலாம்.

இதில் பாங்க் பரிட்சை போலவே பொது அறிவு, ஆங்கில அறிவு, கணிதம், முதலியவற்றில் கேள்விகள் இருக்கும்.

இதில் தேறினால், இண்டர்வியூ. பத்து காலி இடங்களுக்கு 25 பேர் என்கிற கணக்கில் இண்டர்வியூவுக்கு அழைக்கப்படுவார்கள்.

ஸ்கில் டெஸ்ட் (ஷார்ட் ஹாண்ட், டைப்பிங்கில்) மருத்துவ டெஸ்ட் இவையும் நடக்கும்.

எஸ். ஸி. எஸ். டி. போன்ற ஒரு சில பிரிவினருக்கு இண்டர்வியூவுக்குப் போய் வர ரயில் கட்டணம் கிடையாது.

தகவல்:

— எஸ். சந்திரமௌலி




* இதில் பயணம் செய்யக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்!

# இது ஓர் அதிசயக் கார்

1971—லிருந்து 1975—76 வரை ஸ்டாண்டர்ட் மோட்டார்ஸ் நிறுவனத்துக்குக் கொஞ்சம் கஷ்ட காலம்தான். நிர்வாக இயக்குநர் கார்த்திக் நாராயணன் யோசித்தார், யோசித்தார். விளைவு, டீஸல் என்ஜின் பொருத்தப்பட்ட வேன்கள் தயாரிக்கப்பட்டன. அதுவரை லாரி, பஸ் போன்றவைகளுக்கு மட்டும் தான் டீஸல் என்ஜின் போட்டு ஓட்ட முடியும் என்ற நிலையை மாற்றினார். பெட்ரோல் விலை வேறு உயர்ந்திருந்தது. ஸ்டாண்டர்ட் வேன்களுக்கு ஏக கிராக்கி.. மறுபடி வளமான காலம் ஆரம்பமாயிற்று!

"டீஸல் என்ஜின் போட்டு வேன் தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் எப்படி ஏற்பட்டது?" என்று கார்த்திக் நாராயணனிடம் கேட்டேன்.

"வயிறு பசித்தால் மூளை வேலை செய்யும்," என்று பதிலளித்தார் அவர்! இன்று ராணுவம், ஆஸ்பத்திரி, அரசியல்வாதிகள் என்று சமுதாயத்தில் பல பிரிவினர் ஸ்டாண்டர்ட் — 20 வேனைப். பலவிதங்களில் உபயோகப்படுத்துகின்றனர். ("உடல் நிலை மிக மோசமாக இருந்த போது முதல்வரை அப்போலோ ஆஸ்பத்திரியிலிருந்து மீனம்பாக்கம் விமான நிலையம் வரை கொண்டு சென்றது ஸ்டாண்டர்ட் — 20 ஆம்புலன்ஸ்தான் ஸார்! நன்றாகக் குணமாகி அவர் திரும்பி வந்து விட்டதிலிருந்து எங்கள் வண்டிகளின் அதிர்ஷ்டத்தன்மை உங்களுக்கே புரியும்" என்று ஸெண்டிமெண்டலாகச் சொன்னார் பி. ஆர். ஓ. வரதராஜன்.)

ஸ்டாண்டர்ட் மோட்டார் இந்த வருடம் அறிமுகப்படுத்தியிருப்பது ஸ்டாண்டர்ட்—2000 கார். இதன் மூத்த உடன்பிறப்பு இங்கிலாந்து ஆஸ்டின் கம்பெனியின் ரோவர் கார் தான் என்றாலும், இந்திய சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தயாரித்ததற்காகக் கார்த்திக் நாராயணனைப் பாராட்டியே ஆக வேண்டும். இந்த வண்டியில் பயணம் செய்யக் கொடுத்து

வைத்திருக்க வேண்டும்! 150 கி. மீ. வேகத்தில் காற்றைக் கிழித்துச் சாலையில் வழுக்கிக் கொண்டு வண்டி பறந்து கொண்டிருந்தாலும் ஏதோ ஆடம்பர சோபாவில் அமர்ந்திருப்பது போல் தோன்றுகிறதேயொழிய வாகனத்தில் விரைகிற உணர்வே ஏற்படவில்லை! டிரைவர் கதவிலுள்ள பட்டனைத் தட்டினால், எல்லாக் கதவுகளின் கண்ணாடிகளும் தன்னால் மேல் ஏறிக் கொள்கின்றன. இன்னொரு ஸ்பெஷாலிடி ஸ்டியரிங். உயர்த்தியோ, தாழ்த்தியோ (தொப்பை போட்டிருப்பவர்களுக்கு வசதியாக) அட்ஜஸ்ட் செய்து கொள்ளலாம். சீட்டின் முதுகோடு டிரைவர் தன்னை இணைத்துக்கொள்ள பெல்ட். விபத்து ஏற்பட்டால் கூட டிரைவர் ஸ்டியரிங்கில் அடிபட்டு உயிர் இழக்கும் வாய்ப்பு மிகக்குறைவு. நம் உயரத்துக்கு ஏற்ப, முன், பின்னாகத் தள்ளி உட்கார்ந்து கொள்ள அட்ஜஸ்டபிள் ஸீட். நெடுநேரம் காரில் பிரயாணம் செய்து முதுகு வலிக்கிறதா? ஸீட்டில் ஒரு சின்ன அட்ஜஸ்ட்மெண்ட் செய்தால் போதும். ஸீட்டுக்குள் இருக்கும் பஞ்சு மெத்தை முதுகை அழுத்தி வருடிக் கொடுக்கும்! ஐந்தாவது கதவான பின் பக்கம் இருக்கும் கதவை மேல்பக்கமாகத் திறந்தால் ஆழமான டிக்கி. அதிலேயே 4 பேர் ஏறிச் செல்லலாம் போலிருக்கிறது! கண்ணாடி கதவுகளின் மேல் பனி படிந்தால் பட்டனைத் தட்டிவிட்டால் ஹீட்டர் வேலை செய்து பனியை விரட்டிவிடும். இப்படி வசதிகளைச் சொல்லிக் கொண்டே போகலாம். 1 லிட்டர் பெட்ரோலுக்குத் தாராளமாக 15 கி. மீ. செல்வது இதே சக்தி கொண்ட மற்ற இந்தியக் கார்களை ஒப்புநோக்கும் போது அதிகம்தான். தற்போது 68 சதவீத பாகங்கள் இந்தியாவிலேயே தயாராகின்றன. முக்கியமாக இன்ஜினும், கியர் பாக்ஸும் இந்தியத் தயாரிப்புத்தான். உற்பத்தி முழு வேகத்தில் நடக்கும் போது 98 சதவீதம் இந்திய பாகங்களாக இருக்கும்.

பேப்பரில் எந்தவித விளம்பரமும் கொடுக்காமல் தயாரிக்க வேண்டும் என்று ஏற்பாடுகளில் இறங்கியிருக்கும் போதே 1500 கார்களுக்கு மேல் ஆர்டர் வந்து குவிந்து விட்டதாம்! இப்போது இரண்டு வருடங்களுக்கு ஆர்டர் இருக்கிறது. வருடத்தில் 4000 கார்கள் உற்பத்தி செய்ய இருக்கிறார்கள்.

"கார்களை வாங்குவது கொஞ்சம் வசதியானவர்கள் தான்; சாதாரண மக்களுக்கு என்ன பலன்? இதனால் வேலை வாய்ப்புப் பெருகுமா?" என்று கேட்டவுடன் கார்த்திக் நாராயணன் புள்ளி விவரங்களோடு பேச ஆரம்பித்து விட்டார்.

"கார் தயாரிப்பு, பாகங்கள் தயாரிப்பு, ஸர்விஸ் சென்டர்கள், விநியோகஸ்தர்கள், என்று பல முனையில் பார்க்கும் போது ஒரு கார் 9 பேருக்கு வேலை கொடுக்கும் என்று கணக்குப் போட்டு வைத்திருக்கிறோம். வருடத்திற்கு 4000 உற்பத்தி என்றால், வேலை வாய்ப்பு எவ்வளவு பெருகும் என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்!"

அதிசயக் கார் தயாரித்த கார்த்திக் பற்றி ஒரு அதிசயச் செய்தி: மிருதங்கம் வாசிப்பதில் எக்ஸ்பர்ட். வருடா வருடம் திருவையாறில் நடக்கும் தியாகராஜர் ஆராதனையின் போது டி. கே. பட்டம்மாளுக்கு மிருதங்கம் வாசிப்பது கா. நாராயணன் அவர்கள் தான்!

— ப்ரியன்




• வெள்ளோட்ட விழாவில் கார்த்திக் நாராயணனின்: ஆர். வி.: அமைச்சர் ராமச்சந்திரன்

பாரதத்துக்கு
ரஷ்யா
வழங்கும்
கடன்
ரூ.1000 கோடி

ஈழத்தமிழர் பிரச்னையைத்
தீர்ப்பதற்கு மத்திய அரசு
உதவிகரமான, திருப்திகரமான
துரிதமான நடவடிக்கை
மேற்கொண்டு
வருகிறது!







ஈழத் தமிழர் பிரச்னைகளுக்கு
அறிக்கை விட்டு ரொம்பவும்
பாடுபட்டு களைச்சுப்
போயிருக்கீங்க!..
இந்தாங்க, காபி!








# கல்கி

1985 ஜூன் 2
மலர் 43 இதழ் 44
குரோதன வைகாசி 20


## ராஜதந்திரத்துக்குப் பஞ்சம்!

கருணாநிதிக்கும் சரி, எம். ஜி. ஆருக்கும் சரி அடிப்படை நோக்கம் ஈழத் தமிழர் நலன்தான். அணுகு முறையில்தான் வித்தியாசம். அவ்வாறிருக்க கலைஞர் ஆர்ப்பாட்டம் என்று ஆரம்பித்தால் முதல்வர் என்ன செய்திருக்க வேண்டும்?

கோஷம் எழுப்புவதை அனுமதித்து, மத்திய அரசு ஊழியர்கள் காரியாலயத்துக்குள் நுழைவதை ஆர்ப்பாட்டக்காரர்கள் குறுக்கே நின்று தடுத்தால் அப்போது அவர்களைக் கைது செய்து கொண்டு போய்ப் பிற்பகல் சாப்பாட்டு நேரத்தில் விடுவித்திருக்கலாம். பாண்டிச்சேரியில் இப்படித்தான் நடந்தது. அல்லது கடந்த கால அனுபவத்தை வைத்து மறியல்காரர்களைப் போலீஸ் வேனில் ஏற்றி நகருக்கு வெளியே இருபது மைல் தள்ளி இறக்கி விட்டிருக்கலாம். நடந்து ஊர் திரும்பு முன் களைத்துப் போய் படுக்கையில் விழுந்திருப்பார்கள்.

இப்படி இலகுவாக விட்டிருந்தால் ஈழத் தமிழர் நலனில் கருணாநிதிக்கு உள்ள அக்கறை தனக்கும் உண்டு, அதற்காக ஆர்ப்பாட்டம் செய்பவரிடம் தனக்கு அனுதாபமும் உண்டு என்று காட்டிக் கொண்டு எம். ஜி. ஆர். நல்ல பெயர் சம்பாதித்திருக்கலாம். ஆனால் கலைஞரையும் பல்லாயிரக் கணக்கில் தி. மு. க. தொண்டர்களையும் சிறையிலடைத்ததில் கலைஞரின் சாணக்கியம் வென்றது. எம். ஜி. ஆர். அமைச்சரவையின் ராஜ தந்திரமின்மை வெளிப் பட்டது.

சிறைப்பட்டவர்கள் மீது ஏற்பட்ட அனுதாபம் அவர்களில் பலர் திருச்சி சிறைச்சாலையில் அடி வாங்கியபோது அதிகரித்து விட்டிருக்கிறது. பந்தல் எரிந்தது மெய்யே. ஆனால் அதற்குத் தீ வைத்தது சிறை வைக்கப் பட்டிருந்த தி. மு. க. தொண்டர்களே என்பதற்கான ஆதாரம் ஏதும் இல்லை. திடீரென்று வந்து சேர்ந்த ஆயிரம் அரசியல் கைதிகளைச் சமாளிக்க முடியாமல் சிறை அதிகாரிகள் தவித்திருக்கிறார்கள். இட நெருக்கடி, பாத்திரம் — பண்டம் தட்டுப்பாடு முதலியன உராய்வுகளைத் தோற்றுவித்ததில் வியப்பில்லை. அதற்காக மருத்துவமனைக்குச் சென்று சிகிச்சை பெறும் அளவுக்கு இப்படியா முரட்டுத்தனமாக அடித்து நொறுக்குவது? எலும்புகளை முறிப்பது? மண்டைகளைப் பிளப்பது? லத்தி சுழற்றிய சிறை வார்டர்கள் அதிகார வரம்பு மீறி நடந்து கொண்டிருக்கிறார்கள்.

அரசியல் கைதிகள் நடத்தப்படும் விதம் பற்றி அடிப்படைச் சிந்தனை தேவை. பழைய பிரிட்டிஷ் ஆட்சி காலத்து முறைகளையே நாம் இன்னமும் பின்பற்றி வருகிறோம். அரசியல் கைதிகளை இதர கொலை, கொள்ளை, கற்பழிப்புக் குற்றவாளிகளுடன் சேர்த்து ஒரே சிறையில் வைப்பதும் அவர்களைக் கைதி வார்டர்களைக் கொண்டு நிர்வகிப்பதும் அநாகரிகம். உராய்வுகளையே இது உண்டாக்கும். அரசியல் காரணங்களுக்காக ஒரு கட்சியின் தொண்டர்களைச் சிறை வைத்துத்தான் ஆக வேண்டுமென்றால் குறைந்த பட்ச அளவில் கைதாக்கி ஊருக்கு ஒதுக்குப்புறமாக ஒரு பெரிய அரசுக் கட்டிடத்தில் அல்லது திறந்த வெளிச் சிறையில் அவர்களை வைத்துத் தேவையான அளவில் போலீஸ் காவலுக்கு ஏற்பாடு செய்யலாம். இதன் மூலம் மோதல்களைத் தவிர்க்கலாம்.

ஆனால் எமர்ஜென்ஸி காலத்தில் அதிகார துஷ்பிரயோகம் செய்த தாகத் தீர்ப்புப் பெற்ற போலீஸ் அதிகாரிகள் பதவி உயர்வு பெறும் ஆட்சியில் இதையெல்லாம் எதிர்பார்க்கவா முடியும்! எனவேதான் இ. காங்கிரஸ் நீங்கலாக அனைத்து எதிர் கட்சித் தலைவர்களும் ஒன்றிணைந்து ஆளுனரிடம் மகஜர் சமர்ப்பிக்க நேர்ந்திருக்கிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

# இந்தி எதிர்ப்பு இயக்கம்

## 8



'பெரியார்' என்று ஈ. வே. ரா. அழைக்கப்பட ஸி. ஆர். தான் ஒரு வகையில் காரணமாக இருந்தார். ஸி. ஆரின் ஹிந்துஸ்தானி கொள்கையை அவர் தீவிரமாக எதிர்க்கப் போகத்தான் அவரை வியந்து போற்றியவர்கள் 'பெரியார்' என்று அவரைக் குறிப்பிட ஆரம்பித்தார்கள்.

ஸி. ஆர். சேலம் முனிஸிபாலிடி தலைவராக இருந்த போது, ஈ. வே. ரா. ஈரோடு முனிசிபாலிடியின் தலைவராய் இருந்தவர். மஹாத்மா துவக்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் ஸி. ஆர்., ஈ. வே. ரா.வையும் சேர்த்துக் கொண்டார். எனினும் சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபடும் முதல் வாய்ப்பு தமக்குத் தரப்படவில்லை என்பதில் ஈ. வே. ராவுக்கு மனக்குறை உண்டு.

தெற்கே மகாத்மாவின் பிரதம தளபதி என்ற முறையில் ஸி. ஆர். அந்தப் பெருமையைத் தமக்கே வழங்கிக் கொண்டுவிட்டார்.

ஸி.ஆர்.சிறைப்பட்ட சிலவாரங்களுக்குள் தாமும் சிறை புகுந்த ஈ. வே. ரா. முதல் சட்ட மறுப்பு இயக்கம் கைவிடப்பட்டதும் காங்கிரஸிலிருந்து விலகினார். இயக்கம் நீடித்திருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. இருப்பினும் 1925 இல் திருச்செங்கோடு ஆசிரம திறப்பு விழாவில். அவர் பங்குகொள்ள வேண்டும்என்றுவிரும்பினார் ஸி. ஆர். ஈ. வே. ரா.வும் ஒப்புக் கொண்டார். ஆனால் விரைவிலேயே பிரிட்டிஷ் அரசைத் தாக்குவதற்குப் பதில் பிராம்மண அரசைத்தாக்குவதையே தமது பிரதமநோக்கமாகக் கொள்ள ஆரம்பித்து விட்டார். ஈ.வே.ரா.மத சம்பந்தமான மூட நம்பிக்கைகளை மட்டுமன்றி மதத்தையே எதிர்த்தவர். சுய மரியாதை, சீர்திருத்தம், பகுத்தறிவு போன்றவற்றை திராவிடர்களுக்கு உபதேசித்தார். பிராம்மணர்களை தாட்சண்யமின்றி வெளிப்படையாக எதிர்ப்பதில் தீவிரம் காட்டினார். சில நேரங்களில் இடது சாரி சார்புடையவராய்த் தோன்றினாலும், ஜஸ்டிஸ் கட்சியுடன் இயல்பான கூட்டுறவு ஏற்படுத்திக் கொண்டார். இக் கட்சிக்கு நிலம் படைத்தோர் மற்றும் செல்வந்தர்களின் ஆதரவு இருந்தது. அதே சமயத்தில் பிராமணர் அல்லாதாரை ஆதரிக்கும் கட்சி என்ற பெயரும் அதற்கு இருந்தது.

ஹிந்துஸ்தானி கொள்கையை ஸி. ஆர். உச்சரித்த மாத்திரத்திலேயே, பொது மேடைகளில் ஈ. வே. ரா. விடமிருந்தும், சட்டசபையில் ஜஸ்டிஸ் கட்சியினரிடமிருந்தும், அதற்கு எதிர்ப்புக் கிளம்பியது. "ஹிந்தியைத் திணிப்பது சர்வாதிகாரமாகும்" என்று 1938 மார்ச்சில் பன்னீர்ச் செல்வம் அறிவித்தார். எதிர் கட்சியினர் முழுக்க முழுக்க 'ஹிந்தி' என்ற சொல்லையே பயன்படுத்தினர். 'ஹிந்தி'யை 'ஹிந்து' மதத்துடன் தொடர்பு படுத்திய முஸ்லிம் லீக் கட்சி எம். எல். ஏ.க்களின் ஆதரவைப் பெற இது உதவியது. அவர்களும் ஹிந்தித் திணிப்பை எதிர்க்க இணங்கினர். "ஹிந்துஸ்தானி தமிழைக் காட்டிலும் மட்டமாய் இருக்கலாம்; ஆனால் அது உபயோகமாய் இருக்கிறதே" என்று ஸி. ஆர். கூறினார். "தமிழை அது பாதிக்காமல் பார்த்துக் கொள்வோம். தாய் மொழிக்கு பாதிப்பு ஏற்படலாம் என்று அறிந்தால் அடுத்த கணமே இந்தத்திட்டத்தை வாபஸ் வாங்கி விடுகிறேன். ஒரு குழந்தை

தாயை விட செவிலியிடம் அதிகமாக அன்பு செலுத்த ஆரம்பித்தால் செவிலியை உடனே வேலை நீக்கம் செய்வது போல ஹிந்துஸ்தானியை அனுப்பி விடுகிறேன்''.

'எதிர் கட்சியினர் ஸி. ஆர். பேசிய பொதுக் கூட்டங்களுக்கு கறுப்புக் கொடிகளுடன் சென்று ''இந்தி ஒழிக'', ''பிராம்மணர்கள் ஒழிக'' ''ஸி. ஆர்.! திரும்பிப் போ'' போன்ற கோஷங்களை எழுப்பினர். அவருக்கு ஆதரவான பெருங் கூட்டங்கள் கூடின என்றாலும் கறுப்புக் கொடிகள் இல்லாத நிகழ்ச்சிகளே இருக்கவில்லை. திருச்சியில் ஒரு கூட்டத்தில் செருப்புக்களும், பூட்ஸ்களும் பிரதம மந்திரி அமர்ந்திருந்த மேடையை நோக்கி வீசப் பட்டன. அவர் திரும்பிச் செல்லும் போது போலீஸ் உதவியை நாடவேண்டியதாயிற்று.

எதிர்ப்பு ஸி. ஆரின் கொள்கைகளுக்கு மட்டுமல்ல; அவர் எதிர்ப்பாளர்களைச் சமாளித்த முறைக்கும் எதிர்ப்பு இருந்தது! காங்கிரஸ்காரர்கள் அந்நியத் துணி பகிஷ்காரம், கள்ளுக்கடை மறியல் முதலியவற்றில் ஈடுபட்ட போது அவர்களுக்கு எதிராகத் திருத்தப்பட்ட குற்றச் சட்டத்தின் ஏழாம் பிரிவு பிரிட்டிஷ் ஆட்சியினரால் பிரயோகிக்கப்பட்டது. இப்போது அதே ஏழாம் பிரிவை ஸி. ஆர். ஹிந்துஸ்தானியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தவர்கள் மீது பிரயோகித்தார். ஸி. ஆர். உட்பட பல காங்கிரஸ்காரர்கள், இச்சட்டத்தின் கீழ் கைது செய்யப்படுவோருக்கு ஜாமீனில் விடுதலை கிடைக்காது என்பதால் இதனைப் பலமுறை எதிர்த்ததுண்டு. இப்போது அதே சட்டத்தை ஸி. ஆரே ஏன் பிரயோகிக்க வேண்டும்?

ஒரு காரணம் — வேறு வழியே இல்லை என்று அவர் எண்ணியது. மற்றது — பஸ்லுல்லா ரோட்டில் அவர் வீட்டின் எதிரிலும் சில ஹிந்தி கற்பிக்கும் பள்ளிகளின் வாசலிலும் கிளர்ச்சியாளர்கள் இடைவிடாமல் கோஷம் எழுப்பிக் கொண்டிருந்தது. தமது வீட்டில் வசிப்பவர்களுக்கு வாழ்க்கை 'சகிக்க முடியாததாய்' ஆகிக் கொண்டிருப்பதாகப் பிரகாசம் சட்டசபையில் கூறினார். தமக்கு ஒரு காது மந்தமானதால் சந்தைக் கடையில் கூட மந்தமான காதை மேல் நோக்கி வைத்துக் கொண்டு தம்மால் தூங்க முடியும் என்று ஸி. ஆர். கூறுவதுண்டு. அவரால் கூட சத்தத்தைத் தாங்கமுடியவில்லை. கோஷம் எழுப்புவோரை அமைதி குலைக்க முயன்ற குற்றத்துக்காகக் (144 அல்லது 107 ஆம் பிரிவின் கீழ்) கைது செய்ய முடியவில்லை. அவர்கள் எழுப்பும் ஓசை வன்முறையைத் தோற்றுவிக்கும் என்று சொல்ல முடியாது. உபத்திரவம் இழைப்போருக்குச் சட்டப் பூர்வமான தண்டனை மிகச் சாதாரணமானது; மேலும் பின்னணியில் ஓயாமல் தூண்டிக் கொண்டே இருக்கும் சிலரை இந்தச் சட்டம் ஒன்றும் செய்துவிட முடியாது. ஆக அவருக்கு எஞ்சியிருந்த ஒரே வழியாக அவர் கருதியது முன்னர் குறிப்பிட்ட ஏழாம் பிரிவைத்தான்.

ஸி. ஆர். தமது உறுதி ஈ. வே. ரா.வையும் அவர் சகாக்களையும் செயலிழக்கச் செய்யும் என்று எதிர்பார்த்தார். பிரதமச் செயலாளர் பிராக்கன் பரிக்கு ஏழாம் பிரிவைச் சிபாரிசு செய்து அவர் எழுதிய கடிதத்தில் ''இந்த ஆர்ப்பாட்டங்களை ஏற்பாடு செய்பவர்கள் பீனல் சட்டம் பிரயோகிக்கப்படுவதை விரும்ப மாட்டார்கள். சட்டத்தின் கை எது வரை நீளும் என்பதை அவர்கள் அறிந்தவுடன் இந்தப் போராட்டங்கள் நின்று போகும்'' என்று குறிப்பிட்டிருந்தார். சத்தியாக்கிரஹம் என்ற தனது கொள்கை கேலிக் கூத்தாக்கப்படுவதாக அவர் கருதினார். அவர் பெருமையுடன் பங்கு கொண்டிருந்த சத்தியாகிரஹப் போராட்டங்கள் எதிராளியை சங்கடத்துக்குள்ளாக்க முயற்சித்ததேயில்லை. ஸி. ஆர் கடுமையாகச் செயல்பட மற்றும் ஒரு காரணம், நிரந்தரமான ஜாதி பேதங்களை இந்தப் போராட்டம் ஏற்படுத்திக் கொண்டிருந்தது என்பதுதான். அது ஒரு சில தனி மனிதர்களை மட்டுமின்றி தேசத்தின் இதயத்தையே நோகடித்துக் கொண்டிருந்தது.

கிளர்ச்சியாளர்கள், பயன்படுத்திய அநாகரீக வார்த்தைகளும், நண்பர்கள் சிலர் அவருடைய தவிப்பைக் கண்டும் அலட்சியமாக இருந்ததும் ஸி. ஆரின் மனத்தைப் புண்படுத்தியது. ''கிளர்ச்சியாளர்கள் ஜாதியையும், பூணூலையும், உச்சிக் குடுமியையும் வர்ணித்துச் சிலரைக் கேலி செய்கின்றனர்'' என்றும், ''அவர்கள் உபயோகித்த வார்த்தைகளைப் பராபரியாகக் கேட்க நேர்ந்தால் கூட அவையினர் துணுக்குறுவர்'' என்றும் சட்டசபையில் ஸி. ஆர். கூறினார். ''எந்த அரசும் பொறுத்துக் கொள்ள முடியாத அளவிற்கு விரசமாகப் பேசி, தனி மனிதர்களைத் தாக்கி வருகின்றனர். உடலுறவையும், இனப் பெருக்கத்தையும் கூடக் கொச்சையாய்க் குறிப்பிடும் அளவுக்குக் கீழ் தரமாய் இறங்கத் துணிந்துவிட்டனர்''.

''அவர்கள் பயன்படுத்திய சில சொற்களைப் படித்த போது என் ரத்தம் கொதித்தது'' என்று ஒரு நண்பர் ஸி. ஆருக்கு எழுதிய போது, ''நீங்கள் ஒருவராவது இப்படி உணர்கிறீர்களே என்று மகிழ்கிறேன். நம்மில் நற்பண்பாளர்களின் ஆதரவு கூடக் கிடைக்காவிட்டால் இந்தப் பதவியில் இருந்துதான் என்ன பயன்?'' என்று பதில் எழுதினார் ஸி. ஆர்.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதா ரவி

''என் காதலி சிரித்தால் வெண்கல மணி சிதறியது போலிருக்கும்.''

''இதென்ன பிரமாதம். என் காதலி சிரித்தால் சில்லறை சிதறியது போலிருக்கும்.''

— ஏ. சுகுமார்.





அமரர் கல்கி

# நினைவுச் சிறுகதைப் போட்டி-1985

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதை போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ 500 |
| மூன்றாம் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ 250 வீதம்) | ரூ 500 |

ஆக மொத்தம் ரூ 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், கதை வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.




ஹர்மந்திர் ஸாஹபில் அர்த்தாஸ் முடிந்ததும் பக்தர்களுக்கிடையில் சாதாரண உடையில் இருந்த மேஜர் ஜெனரல் குல்தீப்ஸிங் பிரார் நான்கு பக்கமும் கூர்மையாகப் பார்த்தபடி வெளியில் வந்தார். கதவுக்கு வெளியில் பெரிய அண்டாவிலிருந்து விநியோகிக்கப்பட்ட வழக்கமான பிரஸாதத்தை, சுத்த 'தேசி கீ' யில் செய்யப்பட்ட ரவா கேசரியைப் பக்தி சிரத்தையுடன் இரு கையாலும் ஏந்திச் சாப்பிட்டு 'ஹரிக்கி பௌதி' யில் "அமிருத்" நீரைப் பருகி வேகமாகத் 'தர்சனி தௌடி' யைக் கடந்து புனித 'வெய்ச்சி'பேரி' ன் மரத்தருகில் நின்று பார்வையைத் துழாவினர். அந்த இடத்திலிருந்து அகால் தக்தை மிக சமீபத்திலிருந்து பார்க்க முடிந்தது. பார்க்கப் பார்க்க வியப்பு அதிகரித்தது. அகால் தக்த் சுவர்களில் சில சலவைக்கல் ஸ்லாப்புகள்



அகற்றப்பட்டு அங்கு செங்கற்கள் பொருத்திக் குண்டு வெடிக்கத் துவாரங்கள் மட்டும் அமைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. சில சுவர்கள் உடைக்கப்பட்டு மணல் மூட்டைகள் தெரிந்தன. எல்லாச் சாளரங்களும் செங்கற்களால் அடைக்கப்பட்டு, குண்டு வீச்சுக்கான துவாரங்கள் தெரிந்தன. அகால் தக்த்துடன் மிக நெருக்கமாகக் கட்டப்பட்டிருந்த அக்கம்பக்கத்துக் கட்டிடங்கள் அதற்குள் பதுங்கியிருக்கும் பயங்கரவாதிகளுக்கு ஓர் அனுகூலம் என்று பிரார் நினைத்துக் கொண்டார். கூரைக்குக் கூரை தாவித் தப்பி விடலாம்.

அகால் தக்துக்குள்தான் பிந்திரன்வாலேயும் அவனுடைய கணிசமான தொண்டர்களும் ஆயுதங்களுடன் பதுங்கியிருப்பதாக அலுவலகத் தகவல்.

ஹர்மந்திர் ஸாஹப் சீக்கியர்களுக்கு எத்தனை புனிதமானதோ அத்தனை அகால் தக்தும் புனிதமானது. அதை அசிங்கப்படுத்தும் துணிவு உள்ளே உட்கார்ந்திருப்பவனுக்கு ஏற்பட வேண்டுமானால் ஒன்று அவனுக்கு மதம் பிடித்திருக்க வேண்டும் அல்லது வேறு பல காரணங்கள் அவனது ஆணவத்துக்கு உரமேற்றியிருக்க வேண்டும்.

வேறு பல காரணங்கள்—

காரணங்களை ஆராய்வது தனக்கு இப்பொழுது தேவையில்லாதது என்று புரிந்தும் கேள்விகள் திமிறிக் கொண்டு எழுந்தன.

இந்த அளவுக்கு இவனுக்கு இடம் ஏன் அளிக்கப்பட்டது? இப்பொழுது இத்தனை பயங்கர முடிவுக்கு வரவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு அரசு ஏன் தன்னை ஆளாக்கிக் கொண்டது? செயல்பட வேண்டிய தருணத்தில் ஏன் செயல்படவில்லை? சீக்கிய மதத் தலைவர்களும் மற்றவர்களும் ஏன் கண்டிக்கவில்லை?

கண்களைப் பாமரத்தனமாகச் சுழற்றினாலும் அனுபவமிக்க ராணுவப் பார்வைக்குப் பட்ட மேலோட்டமான விவரங்கள் கூட வயிற்றைக் கலக்கின. எதிர்பார்த்ததைவிட மிக நுணுக்கமான தற்காப்பு யத்தனங்களைப் பயங்கரவாதிகள் செய்திருப்பது தெரிந்தது. இவர்களது ஆள் பலம் என்ன? எப்படிப் பட்ட பயிற்சி இருக்கிறது இவர்களுக்கு? ஆயுத பலம் என்ன?

இந்திய இன்டலிஜென்ஸ் ஒரு விவரம் கொடுக்கவில்லை. வெறும் ஹேஷ்யத்தின் பேரில் நான் எப்படிப்பட்ட நடவடிக்கை எடுக்கப் போகிறேன்?

ஹர்மந்திர் ஸாஹப்பின் தங்கக் கலசங்களும் சுவர்களும் காலை வெயிலில் தகதகத்தன. அமிருத சரோவரத்தின் பளிங்கு நீர் நிர்மலமாய் மினுமினுத்தது.

இதை நான் எப்படிக் காப்பாற்றப் போகிறேன்?

ராணுவ முடி வெட்டும் க்ஷவரம் செய்யப்பட்ட தாடையுமாக 'மோனா'வாக (முடி வெட்டிவிட்ட சீக்கியன்) இன்று நின்றாலும் சீக்கிய பெற்றோர்களுக்குப் பிறந்ததை இந்த ஜன்மத்தில் மறக்க முடியாது. இந்தப் பொற்கோயிலைப் பற்றிப் பேச்செடுக்கும்போதும், இதைப் பார்க்கும் போதும் என்னுள் ஏற்படும் வைப்ரேஷனுக்கு விஞ்ஞான ரீதியான விளக்கம் கிடையாது. சீக்கியர்களில் படித்தவர்களுக்கும் பாமரர்களுக்கும் ஒரே மாதிரியாக ஏற்படும் வைப்ரேஷன். சீக்கிய சரித்திரத்தில் எல்லா முக்கிய விஷயங்களும் இந்தக்

கோவிலுடன் சம்பந்தபபட்டவை. இந்தக் கோவிலைக் காக்கவோ, தனது சமூகத்தைக் காக்கவோ உயிர் துறந்த சீக்கியர்களின் சந்ததிகள் இப்பொழுது இருப்பவர்கள், ஞாபகம் வெகு சமீபத்தியது. பாரம்பர்யக் கிளைகளைச் சுலபமாக எட்டிப்பிடிக்கும்படியான நெருக்கமுள்ளது. இதிகாசங்களிலும் புராணக்கதைகளிலும், வேதாந்தத்திலும் உருவகமாக, அருவமாய், சூக்ஷ்மமாய், வேர்கள் மறைந்து நிற்கவில்லை. முந்நூறு வருஷத்து நினைவில் பிரத்தியட்சமாய்க் குருமார்களின் வாக்கில் ஹர் மந்திர் ஸாபிலிருந்தும் அகால் தக்திலிருந்தும் வெளிப்பட்டவை. பரிக்ரமாவின் ஒவ்வொரு சலவைக் கல்லும் புனிதக் கதைகள் கொண்டவை. சத்யமானவை. குருமார்களின் கால்கள் பதிந்த பாதை அது. ஒவ்வொரு சீக்கியனும் இப்போது பவித்திரமாய்ப் பாதுகாக்கும் பாதை, அவனுடைய இந்தப் பிடிமானம், கோவிலுடன் இருக்கும் பிணைப்பு மற்றவர்களுக்குப் புரியுமா என்று அவர் விளுடி கலக்கத்துடன் நின்றார்.

யாரோ அவருடைய தோளைத் தொட்டார்கள். அவர் சட்டென்று சுயநினைவுக்கு வந்தார். மேஜர் ஆனந்த் சாதாரண உடையில் நின்றிருந்தார்.

''சிலவிவரங்கள் கிடைச்சிருக்கு'' என்றார் பிரார் தலையை மட்டும் அசைத்து விட்டு அவருடன் நகர்ந்தார். பிரதான வாயிலைக் கடந்து வெளியில் வந்ததும் பிரார் பார்வையை மேலே உயர்த்தி ஆனந்துக்கு ஜாடை காண்பித்தார். நுழைவாயிலின் மேல் விதானத்துச் சுவர்கள் உடைக்கப்பட்டு, செங்கல் பொருத்தித் துவாரங்கள் மட்டும் தெரிந்தன.

அவர்கள் மௌனமாக அடையாளச் சீட்டுக்களைக் கொடுத்துச் செருப்புக்களைத் திருப்பி வாங்கிப் போட்டுக் கொண்டு தெருவில் நடந்தார்கள்.

''கோவிலைச் சுற்றி இருக்கும் பதினேழு வீடுகளில் பயங்கரவாதிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். குரு ராம்தாஸ் ஸராயின் கிழக்கில் இருக்கும் ஓவர்ஹெட் தண்ணீர் டாங்கின் மேலிருந்தும் செயல்பட பொஸிஷன் கட்டப்பட்டிருக்கிறது. லங்கருக்கு மேற்குப் புறத்து இரண்டு டவர்களிலும் ஆயுதங்களுடன் நிற்கிறார்கள்'' என்றார் ஆனந்த்.

''ஐ விஷ் வி ஹேட் மோர் டீடேயில்ஸ்'' என்றார் பிரார் அலுப்புடன். ''அண்ட் மோர் டைம். ஆறாம் தேதிக்குள் ஆபரேஷன் முடிய வேண்டும் என்று ஆர்டர் எனக்கு. இன்று தேதி ஒன்று. இன்னும் எதிரியின் பலம் என்ன என்பதைப் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை. டெம்பிள் காம்ப்ளெக்ஸில் பரிக்ரமாவைச் சுற்றி எத்தனை கட்டிடங்கள் இருக்கின்றன, பார்த்தியா? எல்லாவற்றிலும் மூடிய கதவுகளுக்குள் எதிரியின் ஆட்கள் இருக்கலாம். நாம் உள்ளே நுழைந்தால் பரிக்ரமாவில் வெட்டவெளியில் நிற்போம். வி வில் பி டோட்டலி எக்ஸ்போஸ்ட் டு ஹிஸ் கன்ஸ், அன்லெஸ் வி டேக் தி ப்ளடி டாங்க்ஸ் இன் ஸைட்!''

''எதிரி சரணாகதி அடைந்து விட்டான்னா பிரச்னையில்லை. உண்மையான சீக்கியனாக

---

# ஸ்பாட் லைட்

தமிழ் நாட்டில் நான் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினால் முப்பது முதல் நாற்பது ஆயிரம் மக்கள் வருவார்கள். ஆனால் நான் தேர்தலுக்கு நின்றால் எனக்கு டெபாசிட் கூட கிடைக்காது!

Savvy இதழ் பேட்டியில் 'சோ'

அனுராதா திரையில் வருவது போல் அசல் வாழ்க்கையில் இல்லை. அவர் ஒரு அறிவுள்ளபெண். சிலுக்குஅரசியலுக்கு ரொம்பப் பொருத்தமானவர். அவர் அரசியலில் புகுந்தால் ஜெயலலிதாவை விட நன்றாகப் பணியாற்றுவார்.

புரோப் இதழ் பேட்டியில் 'வலம்புரி' ஜான்' எம். பி.

மக்கள் சில நடிகர்களை கடவுளுக்கு நிகராக நினைப்பதற்குக் காரணம் சினிமா பத்திரிகைகள்தான்!

ஒரு பேட்டியில் இந்தி நடிகர் ஓம்புரி'

நான் ஒரு மந்திரியாக இருந்தபோது கூட அரசியல் எனக்கு முழு திருப்தியை அளிக்கவில்லை. ஒரு எழுத்தாளனாக இருப்பது, அதுவும் கவிதை எழுதும் போது தான் எனக்கு முழு திருப்தி கிடைக்கிறது.

பாரதிய ஜனதா தலைவர் 'வாஜ்பேயி'.

எமர்ஜன்சி சமயத்தில் அப்போதைய மத்திய மந்திரி வி. சி. சுக்லா என்னை டெலிபோனில் மிரட்டுவார், 'உன் கார்ட்டூன்களை நீ மாற்றிக் கொள்ள வேண்டும்' என்று!

டெக்கான் ஹெரால்ட் பேட்டியில் கார்ட்டூனிஸ்ட் 'ஆர். கே. லட்சுமண்.

தொகுப்பு: அனிதா ராமச்சந்திரன்.



# சங்கர ஜெயந்தி விழா

1985 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25 ஆம் தேதியன்று வள்ளுவர் கோட்டத்தில் சங்கர ஜெயந்தி விழா வெகுவிமரிசையாக கொண்டாடப்பட்டது. இவ்விழாவிற்கான அனைத்து ஏற்பாடுகளையும் மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்ட் கியாரண்டி கம்பெனி லிமிடெட்டின் பிரதம நிர்வாகி, "இந்து தர்ம காவலர்" திரு. பி. வி. சிவன் நாயர் அவர்கள் ஏற்று நடத்தினார். தமிழக அரசின் சத்துணவுத் திட்ட அமைச்சர் மாண்புமிகு சௌந்திரராஜன் அவர்கள் இவ்விழாவிற்கு தலைமைத் தாங்கினார். தமிழ்நாடு இயல், இசை, நாடகக் காவலர் திரு. எஸ். நாராயண சுவாமி அவர்கள், [illegible] குலபதி எஸ். ஜோஷி அவர்கள் மற்றும் பல பிரமுகர்கள் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தனர். தமிழகத்தில் சிறப்புமிக்க அந்தணரின் ரிக்வேத பாராயணத்துடன் விழா மாலை 6 மணிக்குத் துவங்கியது. விழாவிற்கு வந்திருந்த சிறப்பு விருந்தினர்களை ஸ்ரீ சக்ரா ஸ்டேஜ் குழுவை சேர்ந்த திரைப்பட, தொலைக்காட்சி புகழ் மாஸ்டர் ஸ்ரீதர் வரவேற்றார். இவ்விழாவில் கலந்து கொண்ட சிறப்பு விருந்தினர்க்கும், பொதுமக்களுக்கும், காஞ்சி காமகோடி பீடாதிபதி தவத்திரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் சிறப்புச் சீடர் ஒருவர் மூலம் பிரசாதம் அனுப்பி வைத்தார். இக்கலியுகத்தில் சங்கர ஜெயந்தியின் சிறப்பினை விளக்கிய பின் சிறப்பு சீடர் பிரசாதத்தை, மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்டு கியாரண்டி கம்பெனி லிமிடெட்டின் பிரதம நிர்வாகி 'இந்து தர்ம காவலர்' திரு. பி.வி. சிவன் நாயர் அவர்களிடம் வழங்கினார். மேலும், அவர் காஞ்சி மடத்தினரால் 'இந்து தர்ம காவலர்' எனச் சிறப்பிக்கப்பட்ட திரு. பி. வி. சிவன் நாயர் அவர்களை இவ்விழாவினை ஏற்று செவ்வனே நடத்தியமைக்கு பாராட்டினார். 'இந்து தர்ம காவலர்' திரு. பி. வி. சிவன் நாயர் அவர்களை, பாராட்டிப் பேசும் தருணத்தில், இந்து தர்ம மறுபிறப்பிற்கு திரு. நாயர் அவர்கள் ஆற்றிய அரும்பெரும் பணியைக் குறிப்பிட்டு, அவருக்கென காஞ்சி மடத்திலிருந்து விசேஷமாக அனுப்பப்பட்ட பிரசாதத்தையும் பொன்னாடையையும், ருத்ராக்ஷ மாலையையும் அணிவித்து கௌரவித்தார்.

மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்ட் கியாரண்டி கம்பெனி லிமிடெட்டின் பிரதம நிர்வாகி திரு. பி. வி. சிவன் நாயர் அவர்களின் தொண்டினைப் பாராட்டிப் பேசுகையில், மாண்புமிகு அமைச்சர் திரு. சௌந்திரராஜன் அவர்கள் தனது நன்றியினை இந்து தர்மம் தழைத்தோங்க ஆக்கபூர்வமான பணியினை ஆற்றும் திரு. பி.வி. சிவன் நாயருக்குத் தெரிவித்தார். நாடகக் காவலர் திரு. எஸ். நாராயண சுவாமி அவர்கள் திரு. சிவன் நாயர் அவர்களை தனது சகோதரன் எனக் குறிப்பிட்டார். இந்து தர்மத்திற்காக திரு. சிவன் நாயர் ஆற்றும் அரும்பெரும் தொண்டினை பாராட்டியதோடல்லாமல் அவர் தமிழகத்தில் நாடகக்கலை வளர்வதற்கும் உறுதுணையாக இருந்து வருகிறார் என்று வானளாவப் புகழ்ந்துரைத்தார். விழாவில் கலந்து கொண்ட மற்ற சிறப்பு விருந்தினர்களும் மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்ட் கியாரண்டி கம்பெனி லிமிடெட்டின் பிரதம நிர்வாகி 'இந்து தர்ம காவலர்' திரு. பி.வி. சிவன் நாயர் அவர்கள் இந்து மதத்திற்காக ஆற்றும் மாபெரும் பணியினையும் குறிப்பாக, இவ்விழாவின் மூலம் பல்லாயிரக்கணக்கானோர் ஆதிசங்கரரின் வரலாற்றைக் கண்டறிய ஸ்ரீ சக்ரா ஸ்டேஜ் குழுவினரின் 'ஆதி சங்கரர்' எனும் நாடகத்தை ஏற்பாடு செய்தமைக்கும் பாராட்டுத் தெரிவித்தனர். ஸ்ரீ சக்ரா ஸ்டேஜ் குழுவைச் சார்ந்த அனைத்து கலைஞர்களும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகளால் வழங்கப்பெற்ற பிரசாதத்துடனும், பொன்னாடையுடனும், ருத்திராட்ச மாலையுடனும் காஞ்சி மடத்தின் பதக்கத்துடனும் கௌரவிக்கப்பட்டனர். பிரம்மாண்டமாக அமையப்பெற்ற முதற் காட்சியில் 'இந்து தர்ம காவலர்' திரு. பி. வி. சிவன் நாயர் அவர்கள் ஸ்ரீ சக்ரா ஸ்டேஜ் குழுவினரால் விசேஷமாக கௌரவிக்கப்பட்டார். குழுவினரின் சார்பாக மாண்புமிகு அமைச்சர் திரு. சௌந்திரராஜன் அவர்கள், 'இந்து தர்ம காவலர்' திரு. பி. வி. சிவன் நாயர் அவர்களுக்கு பொன்னாடை போர்த்தி மலர் கிரீடமும் மாலையும் அணிவித்து, காஞ்சி மடத்தின் விசேட பிரசாதத்தையும் அளித்து கௌரவித்தார். சிறப்புமிக்க இவ்விழாவினை தவணைமுறையில் வாகனங்களுக்குக் கடனளித்து வரும் மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்ட் கியாரண்டி கம்பெனி லிமிடெட் தனது பிரதம நிர்வாகியான திரு. பி.வி. சிவன் நாயர் அவர்கள் மூலம் சிறப்புற இனிதே நடத்தியது.

இருபதாயிரத்திற்கும் மேலான மக்கள் கலந்துகொள்ளக் கூடிய அளவிற்கு இடவசதியுடைய வள்ளுவர் கோட்டத்தில் இவ்விழாவன்று மக்கள் வெள்ளமென திரண்டு வந்தனர். மாஸ்டர் ஸ்ரீதரின் ஆதிசங்கரர் நாடகத்தை நொடிப்பொழுதேனும் காணவேண்டி பல்லாயிரக்கணக்கானோர் அலைமோதியதால், சில தருணங்களில் நிற்பதற்கும் கூட இடமில்லாதாயிற்று. இரவு 8.30 மணிக்குத் துவங்கிய இத்தெய்வீக நாடகத்தை பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் நாடகம் முடிந்த 10.50 மணி வரை கண்டு களித்தனர். பக்தி பரவசத்தால் நாடகத்தில் மக்கள் லயித்துவிட்டதால், ஊசி விழும் சப்தம் கூட கேட்கும் அளவிற்கு அமைதி நிலவியது. இவ்விழாவிற்கு பரந்து விரிந்து கிடக்கும் நகரமாம் சென்னை நகரம் இதுவரை கண்டிராத அளவிற்கு மக்கள் வெள்ளம் திரண்டிருந்தது. மதச் சார்புடைய ஒரு விழாவிற்கு அனைத்து மக்களும் அலைமோதியதற்கு, காஞ்சி காமகோடி பீடத்தின் அதிபதி ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகளின் தெய்வீக ஆற்றலும், இவ்விழாவினை சிறப்படையச் செய்ய வேண்டி தன்னலம் பாராது எடுத்த பணியினை சிரமேற்கொண்டு பணியாற்றிய மெட்ராஸ் மோட்டார் ஜெனரல் அண்ட் கியாரண்டி கம்பெனி லிமிடெட்டின் பிரதம நிர்வாகி 'இந்து தர்ம காவலர்' திரு. பி.வி. சிவன் நாயர் அவர்களின் தன்னலமற்ற சேவையுமே காரணமாகும். ஆதிசங்கரர் போதித்தருளிய அத்வைத தர்மத்தின் உட்கருத்தை பல கோடி மக்கள் இந்நாடகத்தின் வழி புரிந்து கொண்டனர்.

இருந்தால்,கோவிலுக்குஆபத்துவரக்கூடாது என்கிற எண்ணம்' இருந்தால் சரணாகதி அடைவான்!''

பிரார் பதில் சொல்லாமல் நடந்தார். ஆனந்த் ஹிந்து. அவனுக்குச் சீக்கிய எண்ண ஓட்டம் எப்படியிருக்கும் என்று தெரியாது. பதிலுக்குப் பதில் கொடுப்பது வீரம் என்கிற நினைப்பிலும், கோவிலைக் காப்பதற்காக உயிர் துறந்தவர்களை 'ஷாஹீத்' என்று அமரர்களாக்கிவிடும் மரபிலும் வளர்ந்தவன் எதிரி. சரணாகதி அடைந்து தூக்கில் ஏறுவதைவிட கோவிலுக்குள் குண்டுபட்டு இறந்து 'ஷாஹீத்' ஆவது மேல் என்று தீர்மானிக்கப் போகிறவன். மதப் போர்வையைப் போர்த்திக் கொண்டிருப்பதால் சீக்கிய பாமரர்களின் கண்ணை மறைத்தவன். அவனுடைய உண்மை நடவடிக்கைகளைப் பற்றியோ அவனது ஆயுத பலத்தைப் பற்றின எல்லையையோ, அதன் ஆபத்தையோ அவர்கள் அறிவார்த்தமாக உணர்ந்திருக்க முடியாது. ஒரு அரசியல் பிரச்னையாய் போய் விட்டவனை அகற்ற வேண்டுமானால் வேறு மார்க்கங்கள் இருக்கவில்லையா என்று நாளைக்குக் கோவிலுக்குள் ராணுவப் பிரவேசம் ஆன பிறகு பொங்கப் போகிறவர்கள்...

சாலையின் வலப்புறம். இருந்த சின்னச் சந்தில் கரிய நிறப் பலகையில் பஞ்சாபியிலும், ஆங்கிலத்திலும் ''ஜாலியன் வாலா பாக்'' என்று எழுதியிருந்தது.

''எத்தனை பெரிய வேடிக்கை பார். இந்த இடத்தில் ஹிந்துவும் சீக்கும் முஸ்லிம் மும்பேதமில்லாமல்ஒன்றாய்கூட்டம்போட்டு, ஒன்றாய் செத்துப் போனார்கள் ஒரு பகைவனை எதிர்த்து. இப்பொழுது கதை தலைகீழாய் விட்டது.'' என்றார் பிரார்.

தெருக்கள் மிக நெரிசலாக இருந்தன. கோவிலுக்குள் தெரிந்த அபிட்சத்துக்கும், துப்புரவுக்கும் சம்பந்தமில்லாத கவனமின்மை தெரிந்தது, வெள்ளை காணாத புராமரிப்பில்லாத வீடுகளில். ஆனால் ஒவ்வொரு வீட்டின் மேலும் டி. வி. ஆன்டினா வானை நோக்கி நின்றிருந்தது.

''டி. வி. ரேடியோ வாங்குவதற்குப் பதில் துப்பாக்கி வாங்குங்கள்' என்கிறானாம் பிந்திரன்வாலே! ஹிந்துக்கள் சண்டைக்கு வந்தால் டி. வி. யால் அவர்களை மொத்துவீர்களா என்று கேட்கிறானாம்!'' என்றார் ஆனந்த்.

பிரார் புன்னகைத்துவிட்டு யோசனையுடன் நடந்தார். 'அமிருத்ஸரில் இருப்பவர்கள் பாகிஸ்தான் டி. வி. நிகழ்ச்சிகளைத்தான் விரும்பிப் பார்க்கிறார்கள். சமீப காலமாக மிக மோசமான பிரச்சாரம் செய்து வருகிறது பாக் டி. வி.

அவர்கள் கண்ட்ரோல்ரூமுக்குப் போய்ச் சேர்ந்த போது லெஃப்டினென்ட் ஜெனரல் தயால் காத்திருந்தார். காலையில் ஹெலிகாப்டரில் எடுத்த புகைப்படங்களையும் கிடைத்ததகவல்களையும்சேர்த்துப்பொருத்தி வரைபடமாக்கியிருந்தார்.

''ராணுவப் பிரவேசத்தைத் தவிர வேறு வழியில்லை,'' என்றார். ''இட் இஸ் நாட் எ பாரா மிலிட்டிரி ஜாப். தி டெரரிஸ்ட்ஸ் ஆர் டு வெல் என்ட்ரென்ச்ட். நேத்து CRPF அவர்களைத் தாக்க நினைத்து நிறைய ஆள் நஷ்டம் ஆகிப் பின்வாங்கி விட்டதாம்.''

பிரார் சோர்வுடன் எழுந்தார். இந்த ஆபரேஷனுக்காக வந்திருந்த ஆறு டிவிஷன்களில் சீக்கிய ஜவான்களும் ஆபீஸர்களும் நிறைய பேர் இருந்தார்கள். அவர்களுடைய மனநிலையை அறிந்தாக வேண்டும் என்று தோன்றிற்று. ஒவ்வொரு யூனிட்டுக்கும் சென்று அவர்கள் முன் நின்று பேசுகையில் மெல்லிய சங்கடம் ஏற்பட்டது.

''பகைவன் தர்பார் ஸாஹிப்பைக் கைப்பிடித்து வைத்திருக்கிறான். பாகிஸ்தானுடன் தொடர்பு வைத்திருக்கிறான். 'காலிஸ்தான் என்கிற சுதந்திர சீக்கிய நாட்டைப் பஞ்சாபிலிருந்தும் தாய்நாட்டிலிருந்தும் பிரித்து உருவாக்கப் பார்க்கிறான். நமது தேசத்து ஒற்றுமையைக் காப்பதற்காக உறுதி கொண்டவர்கள் நாம். நானும் ஒரு சீக்கியன். பொற்கோவிலுக்குள் ராணுவம்போவது எனக்கும் துயரத்தைத் தான் கொடுக்கிறது. ஆனால் இது தவிர்க்க முடியாதது என்று நான் உணருகிறேன். உங்களில் யாருக்காவது இந்தச் சண்டையில் சேரச் சம்மதமில்லையானால் முடியாது என்று சொல்ல உங்களுக்குப் பூரண சுதந்திரமுண்டு. இஷ்டமில்லாதவர்கள் கையைத் தூக்குங்கள். உங்கள் விருப்பம் அங்கீகரிக்கப்படும். உங்களுக்கு எதிராக எடுத்துக் கொள்ளப்படாது.'

ஒரு கை உயரவில்லை. அவருக்குப் பெருமிதத்தில் மார்பு பூரித்துக் கண்களில் நீர் படர்ந்தது.

* * * * *

குருநானக் நிவாஸின் இரண்டாவது மாடியில் இருக்கும் SGPC அலுவலகத்தில் லாங்கோவால் க்வலையுடன் தோஹ்ராவைப் பார்த்தார். ஜூன் மூன்றாம் தேதி ஐந்தாம் சீக்கிய குரு அர்ஜுன் தேவின் நினைவு நாள். நூற்றுக்கணக்கான பக்தர்கள் கோவிலுக்குள் சேர்ந்திருந்தார்கள். மாலையிலிருந்து நிச்சயமில்லாத கர்ஃப்யூவாக இருந்ததால் வெளியேற முடியாமல் உள்ளே மாட்டிக் கொண்டிருந்தார்கள். இன்றோ நாளையோ ராணுவம் நிச்சயம் கோவிலுக்குள் நுழையப் போவதாகச் செய்தி எட்டியிருந்தது. சர்வநாசம் நிகழப் போவதை எப்படித் தடுக்கப் போகிறோம்?

தோஹ்ரா எழுந்தார்.

''நான் போய்ப் பேசிப் பார்க்கிறேன்'' என்றார்.

சண்டைக்கு ஆயத்தம் என்றாற் போல அதிகாலையில் ராணுவத் தரப்பிலிருந்தும் பிந்திரன்வாலே தரப்பிலிருந்தும் கேட்ட வெடிச் சப்தம் நின்றிருந்தது. தோஹ்ரா பரிக்ரமாவை வேகமாகத் தாண்டி அகால் தக்தை அடைந்தார்.

பேஸ்மெண்ட்டில்ஷாபேக்ஸிங், அமெரிக் ஸிங்குடன் ஏதோ தீவிர ஆலோசனையில் இருந்த பிந்திரன்வாலே தோஹ்ராவை வியப்புடன் பார்த்தார்.

நிச்சயம் இவன் ஒப்புக்கொள்ள மாட்டான் என்கிற அனுமானத்துடன் தோஹ்ரா ஆரம்பித்தார்.

''ஸந்த் ஜர்நெய்ல் ஸிங்ஜி! தயவு செய்து சரணடைந்து விடுங்கள். ராணுவம் கோவிலுக்குள் நுழைந்துவிட்டால் அனர்த்தமாகிவிடும். அகால் தக்த் மட்டுமில்லே, ஹர்மந்திர் ஸாஹபும் சேதமடையும். ராணுவ பலத்தோடு நீங்கள் போட்டி போட முடியுமா?''

பிந்திரன்வாலேயின் கண்களில் கோபம் சுளீரென்று பளபளத்தது.

''அடச் சீ! இதைச் சொல்லவா இத்தனை தூரம் வந்தே? உன்னைப் போலத் தொடை நடுங்கி நான் இல்லே. ஒருவருஷமா பேசறதை நிறுத்திட்டேன்னு அந்த 'காந்தியவாதி' உன்னைத் தூது அனுப்பிச்சானா? நீங்கள்ளாம் ஸென்ட்டருடைய ஏஜெண்டுகள். போ வெளியே!''

குரு நானக் நிவாஸை நோக்கித் திரும்ப நடக்கையில் தோஹ்ராவின் அடிவயிற்றில் ஜில்லிப்பு ஏற்பட்டது. அகால் தக்தின் பிரதானி கிர்பால் ஸிங்கின் ஆட்சேபத்தை மீறி பிந்திரன்வாலேயை அகால் தக்தில் இருக்க அனுமதித்த தனது பாவத்துக்கு விரைவில் சீக்கிய சமூகம் கூலி கொடுக்கப் போகிறது என்கிற பயம் நெஞ்சை அழுத்திற்று.

5–ம் தேதி மாலே. ராணுவ அதிகாரிகள் லௌட் ஸ்பீக்கரில் கோவிலின் பிரதான வாயிலுக்கு முன் நின்று சொன்னார்கள்:

''கோவிலுக்குள் இருக்கும் எல்லா யாத்திரீகர்களும் மற்றவர்களும் தயவு செய்து வெளியில் வந்துவிடுங்கள்! ஆயுதம் வைத்திருப்பவர்கள் எல்லாம் சரணடைந்து விடுங்கள்!''

பிராரின் முகத்தில் கவலேயும் எதிர்பார்ப்பும் தெரிந்தன. அத்தனை கூவல்களுக்கும் வெகு சிலரே வெளியில் வந்தது ஏமாற்றத்தை அளித்தது.

இரவு சண்டை துவங்கியது. எடுத்தஎடுப்பில் நாற்பத்தி ஐந்து கமாண்டோஸ் உள்ளே நுழைந்த மாத்திரத்தில் சுடீடு வீழ்த்தப் பட்டதும் பிரார் அதிர்ந்து போனார். மூன்று வாயில்கள் வழியாக ராணுவம் உள்ளே சென்று சண்டையிடத் துவங்கிய பிறகு ராணுவ வீரர்கள் செத்து விழுந்த வேகம் எதிரியின் பலத்தை நிரூபணம் செய்யச் செய்ய பிராரின் அதிர்ச்சி அதிகரித்தது. அகால் தக்துக்குள்ளிருந்து பாய்ந்து வந்த குண்டு வீச்சுகளுக்கு ராணுவ வீரர்கள் அதிக நேரம் தாக்குக் கொடுக்க முடியாது என்று புரிந்தது.

பரிக்ரமாவுக்குள் டாங்குகளைக் கொண்டு போவதைத் தவிர வேறு வழியில்லே என்ற பிராரின் யோசனையை ஜூன் ஆறும் தேதி விடியற்காலே 2.30 மணிக்கு ஹெட் குவார்ட்டர்ஸ் அங்கீகரித்தது.

தன் வீட்டு மொட்டை மாடியில் நின்றபடி யுத்தகளமாகப் போய்விட்ட கோவில் பக்கம் பார்வையைப் பதித்திருந்த குருசரன் ஸிங் தனக்குள் பொங்கிய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த இயலாமல் விசித்து விசித்து அழுதார். ஒரு உருது கவிதை மனத்தில் திரும்பத் திரும்ப ஒலித்தது:

''இதற்குத்தான் விதி எங்களைச் சுள்ளிகள்
பொறுக்க வைத்ததா?
நாங்கள் கூடுகட்டி முடித்த பிறகு யாரோ
அதற்குத் தீ வைக்க?''

(தொடரும்)

# அடுத்த வாரம்



# நட்சத்திரங்களைக் கொஞ்சம் எட்டிப் பார்க்கலாமா?



पश्यम शरदः शतम



# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD).

Jayendra Bhavan, 1-57, North Mada Street,
Po. Tirumala Hills - 517 504.

ஸ்ரீகாஞ்சி சங்கராச்சாரியர் ஸ்வாமிகளின் ஆசியுடனும் அன்பார்ந்த வாசகர்களின் விசேஷ உதவியுடனும் கடந்த ஒரு வருஷமாக விழிகளை இழந்தவர்களுக்கு பல விதங்களிலும் உதவி அளித்து வருகிறோம்.

தானங்களில் சிறந்த தானமாக கண் தானத்தின் சிறப்பை அறிந்து மரணத்திற்குப் பிறகு தனது கண்களை தானம் அளித்துள்ள ஏழை தியாகியின் குடும்பத்திற்கு ரூ 2,000/– சன்மானம் வழங்கப்படும். சம்பந்தபட்டவர்கள் தகுந்த டாக்டர் அத்தாட்சி பத்திரத்துடன் விண்ணப்பிக்கலாம். மேலும் விழிகளை இழந்த ஆண் அல்லது பெண்ணை மணக்க முன் வரும் நபருக்கு ரூ 1,000/– உதவித் தொகை வழங்கப்படும் அல்லது எமது (Group Blind Marriage Scheme) ல் சேர்த்துக் கொண்டு மொத்த செலவுகளையும் நாங்களே ஏற்று திருப்பதி அல்லது சென்னையில் திருமணத்தை நடத்தி வைக்கிறோம். அது தவிர பார்வையை இழந்த ஏழைப் பெண்களுக்கு ஏதேனும் ஜீவனத் தொழில் செய்யும் பொருட்டு மாதாந்திரமாகவோ அல்லது மொத்தமாகவோ பொருள் உதவி அளிக்கப்படும். தகுதியுள்ளவர்கள் போதிய விவரத்துடன் விண்ணப்பிக்கவும்.

எதிர்காலத்திலும் விழிகளை இழந்தவர்களுக்கு எமது சேவையை விசேஷமாக விஸ்தரிக்கும் பொருட்டு ஆஸ்திகர்களின் உதவியை பெரிதும் வேண்டுகிறோம். கலியுக கண் கண்ட தெய்வமான ஸ்ரீவெங்கடாஜலபதி திருக்கோயில் கொண்டிருக்கும் இந்த புண்ய க்ஷேத்திரத்தில் எந்த ஒரு தொண்டு செய்தாலும் அதற்கு ஆயிரம் மடங்கு அதிகமாக புண்யபலன் கிடைப்பதாக புராணங்கள் கூறுகின்றன. விழிகளை இழந்த ஒரு நபருக்கு ஒரு வருஷ காலத்திற்கு கல்வி, உடை மற்றும் ஒரு வேளை சாப்பாட்டிற்கு உதவ விரும்பினால் ரூ 501/– அனுப்பலாம். இந்த மாபெரும் சேவைக்காக வருஷம் பூராவும் உங்கள் கோத்திரம் பெயரில் பிரதி நித்யமும் ஸ்ரீவெங்கடாஜலபதிக்கு அர்ச்சனை பூஜை செய்விக்க ஏற்பாடு செய்கிறோம். மேலும் நீங்கள் குறிப்பிடும் ஒரு நன்னாளில் விசேஷ ப்ரார்த்தனை செய்வித்து ஸ்ரீ ஏழுமலையானின் ப்ரசாதமும் அனுப்புகிறோம். தவிரவும் நீங்கள் திருமலைக்கு யாத்திரை வரும்போது தேவையான உதவிகளையும் அளிக்கிறோம்.

ஒரு குறிப்பிட்ட நன்னாளில் ரூ 51/– அனுப்பும் அன்பர்களின் சார்பாக விசேஷ ப்ராத்த்தனை செய்வித்து விழிகளை இழந்தவர்களுக்கு அன்னதானமும் ஏற்பாடு செய்து ஸ்ரீ வெங்கடாஜலபதியின் ம்ஹா ப்ரசாதமும் அனுப்பி வைக்கிறோம். இந்த புனிதமான சேவையில் கலந்துக் கொள்ள விரும்பும் வாசகர்கள் தங்களுடைய நன்கொடையை செக்/ட்ராப்ட்/மணி ஆர்டர் மூலமாக மேற்குறிப்பிட்ட விலாசத்திற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

"தானங்களில் சிறந்த தானம் கண் தானமும் அன்னதானமும் தான்"

**K. SRINIVASAN**
**SECRETARY.**

## 33

## விட்டோபாவும் வந்தார்

வர்மனும், வேன்ஸானும், திருமலையை அடைந்தார்கள்.

வனம் சூழ்ந்த, வாவிகளும், அருவிகளும் சிதறும் மலை ஆதலால், எங்கும் சில் என்று தண்மை பரந்திருந்தது.

வந்த பக்தர்கள் தொலைவுகளிலிருந்து வந்து, சிரம சாத்தியங்களோடு மலைகளையும் கடந்து மேலே வந்திருப்பதால்,

கோயிலைக் கண்டதும் அவர்கள் கொண்ட பரவசம் பாற்கடல் போன்றது.

எனவே மெய் மறந்து, மெய் சிலிர்த்து, 'கோவிந்தா, கோவிந்தா' என்று ஆன்ம சுத்தமாய் இயம்ப,

மொத்தமான தொனியில் எழுந்த அந்த 'கோவிந்தா' என்னும் நாமம் அந்தப் பிரதேசமெல்லாம் மெள்ளக் கரைந்து நிரம்பி அத்தனை பாப எண்ணங்களையும், பாபங்களையும் விரட்டுவது போல் இருந்தது.

வர்மனும், வேன்ஸானும் அந்தப் பக்திப் பரவசங்களில் திளைத்து,

புஷ்கரணியில் நீராடி, ஜபம் தியானங்களைச் செய்து,

சுத்தமான ஆடைகளுடன் கோயிலின் முகப்பை அணுகினார்கள்.

அந்நாளில் கோவிலைச் சுற்றி நான்கு வீதிகளும், பிறகு புஷ்பம் கொழித்த தோட்டங்களும் இருந்தன.

கிழக்கு மாட வீதியிலிருந்து, கோபுர வாசலில் நுழைய, இடது பக்கம் ராஜ மண்டபம் இருந்தது.

''ஒரு காலத்தில் துருக்கருக்குப் பயந்து இடம் பெயர்க்கப்பட்ட ரங்கநாதர் (உற்சவ விக்கிரகம்) இந்தத் தனி மண்டபத்தில் தான் தங்கி இருந்தார். ரங்கநாத யாதவராயர் இந்த மண்டபத்தை அவருக்குக் கட்டுவித்தான்'' என்றார் வேன்ஸான்.

அப்பால் உள்ளே சென்று திருமாமணி மண்டபம் போய்ப் பங்காரு வாகிலி என்ற தங்கக் கதவின் வாசலை அடைய,

அங்கே நின்றிருந்த சேவகர்கள், பக்தப் பெருமக்கள் என்ன கொண்டு வருகிறார்கள் என்பதை ஆராய்ந்து,

காணிக்கை கொண்டு வந்தால் அவற்றை ஒரு துணியில் அவர்கள் கண் முன்னால் எண்ணிப் போடச் சொல்லி,

அந்தத்துணியை முடிந்து அவர்கள் கையில் வைத்துக் கொள்ளச் சொன்னார்கள்.

பிறகு சிப்பந்தி ஒருவர் அந்தப் பக்தரைத் தனியாக அழைத்துச் சென்று சுவாமி வேங்கடவர் முன்னால் கொண்டுவிட,

அங்கே சுவாமியின் முன்னால் வைக்கப்பட்டிருந்த பெரிய கங்காளத்திலோ, பெரிய கொப்பரையிலோ தங்கள் காணிக்கையைப் போடுகிறார்களா என்பதை நிச்சயப்படுத்தி விட்டுச் சென்றார்கள்.

வர்மனும், வேன்ஸானும் காணிக்கை சமர்ப்பிக்க, அவர்களைச் சிப்பந்தி உள்ளே சன்னதி வரை அழைத்துச் சென்றார்.

கற்பூரப் புகையும், சந்தனம், பூ, புனுகு, அத்தர் போன்ற வாசனைகளும் கலந்த சன்னதியில் அர்ச்சகர்கள் அவ்வப்போது ஆரத்தி எடுக்க,

'கோவிந்தா,' 'கோவிந்தா' தொனி ஏகோபித்து எழுந்து

மனத்தின் அந்தரங்கங்களில் எல்லாம் சென்று பக்தி மணம் தெளித்துத் துப்புரவாக்கியது.

முதன் முறையாக வேங்கடவரை வர்மன் பார்த்தான்.

புகை நிறைந்த சன்னதியில் வேங்கடவர் சகல ஆபரணங்களும் தரித்து சுயம் பிரகாசியாக இருந்தார்.

நெற்றியில் நாமமும், தலையில் தங்கக் கிரீடமும், கைகளில் கவசங்களும், மார்பில் லட்சுமியும், மேனி பூராவும் வயிர வைடூரியம் மிகுந்த அணிமணிகளும் தரித்து,

பல நூற்றாண்டுகளாக ஒரே இடத்தில் ஸ்தாபிதமாய் இருந்த காரணமாயும்,

பக்த கோடிகளை ஆகர்ஷித்து அவர்களை ஒரே இடத்தில் கூட்டி வைத்து ''கோவிந்தா, கோவிந்தா'' என்று உச்சரிக்கச் சொல்லி, அதன் அனைத்துப் புண்ணியத்தையும் அங்கே

## மோகினி திருக்கோலம்



நிரந்தர தெய்வீகத் துடிப்புகளாகப் பரப்பி வைத்துள்ள காரணமாயும்.

யாத்திரிகர் அனைவரும் அந்தச்சன்னதியில் ஒரு புனகமான பக்தி அலையில் மூழ்கி எழுந்து பரிசுத்தமானார்கள்.

பிறகு வர்மன் தனது துணிப்பையிலிருந்து கார்வேட்ராஜா கொடுத்தமஞ்சள் பொதியை எடுத்து.

பயபக்தியுடன் வேங்கடவனைச் சேவித்து.

''வேங்கடேசுவரா! ராஜா தீர்மானமில்லாமல் குழம்புகிறார். தங்கள் நிதியாவும் நல்ல இடத்துக்குப் போய்ச் சேர வேண்டும் என்பது அவரது அவா! எனவே இந்த நாட்டுக்கு நன்மை பயக்கத்தக்கவர்கள் யாவர் என்று நினைக்கிறோமோ அவர்களிடம்தங்கள் நிதி போய்ச் சேரும்படி அருள் புரிவாய்! எங்களுக்கு வழிகாட்டுவாய்!'' என்று கண்ணீர் உருக்கமாய்ப் பிரார்த்தனை செய்தான்.

பிறகு வலது புறமிருந்த கொப்பரையில் துணி மூடிப்பை நலுங்காமல்செலுத்திவிட்டு.

அர்ச்சகரிடம் தீர்த்தப் பிரசாதமும், சடகோபமும் பெற்று.

'கோவிந்தா, கோவிந்தா' என்று பக்த ஜன கோஷ்டியுடன் கோஷமாகக் கூறிக்கொண்டு வெளியே வந்தான்.

வாசலில் ஜனங்கள் பாத்திரங்களிலிருந்து பருப்பு வகை வரை எல்லாவித காணிக்கைகளையும் கையில் ஏந்திக் கொண்டு நிற்பதைப் பார்த்தான்.

அத்தனை பேருக்கும் ஏதோ குறையோ, அல்லது மனத்தில் ஏக்கமோ, அல்லது பக்திப் பரவசமோ ஏற்பட்டுத் தூர தூரங்களிலிருந்து அங்கே வந்திருந்தார்கள்.

பக்த ஜனங்களை நவாப் உத்தியோகஸ்தர்களான தாசில்தாரர்களும் இதர சிப்பந்திகளும் கண்காணித்ததோடு மட்டுமல்லாமல் அவரவர்க்கு வசதிகளைச் செய்து கொடுத்த வண்ணம் இருந்தார்கள்.

திருடு, கொள்ளை, கொலை போன்று ஏதும் நடந்து விடா வண்ணம் திருமலையிலும், மலைப் பாதையில் ஆங்காங்கேயும் காவல் புரிந்தார்கள்.

பிறகு வர்மனும், வேன்லானும் ஊரை வலம் வந்து, வடக்கு மாட வீதியில் வருங்காலையில் ஒரு மடத்து வாசலில் நின்ற ஒருவர், ''அடேடே! தம்பி! தம்பி!'' என்று அழைக்க, வர்மன் திரும்பினான்.

தலைப்பாகை அணிந்து முத்துத்தாழ்வடங்கள் தரித்து நீள வெள்ளை நிறத்து அங்கி



அணிந்திருந்தவனை, நிச்சயம் வர்மனால் அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது.

வைர வர்த்தகன் விட்டோபா அவன்.

"தம்பீ! தம்பீ! பார்த்துப் பல நாள் ஆயிற்றே! பொம்மராஜ பாளையம் ஜமீன்தாரிடம் காரியமாய் உன்னை அனுப்பித் தோமே! செய்து முடித்தாயா? பெண்ணை ஜாக்கிரதையாகச் சேர்த்தாயா? லிகிதத்தைக் கொடுத்தாயா? போனவன் போனவனே என்று ஆகிவிட்டாயே! உன்னோடு வந்த யாரும் எம்மிடம் வந்து எந்தச் செய்தியும் சொல்லவில்லையே! அவர்கள் கதி என்ன ஆயிற்று?" என்று மூச்சு நிற்காமல் கேட்டுக் கொண்டு போனார்.

வர்மன் சிறிதே இகைத்து, விட்டோபா அவனுடன் அனுப்பிய மராட்டிய ஆட்கள் அவன் கையாலேயே மோட்சம் போய் விட்டார்கள் என்பதை நினைத்து.

"ஐயா! என் செய்வேன்! மராட்டியர் தான் முராரி ராவ் தலைமையில் பெரும்பாலோர் தங்கி இருந்தாலும், பலர் நாட்டின் சீர்கேடான நிலை கண்டு அவரவர் தனித் தனிக் கும்பல்களாகச் சேர்ந்து, தம் இஷ்ட முறையில் சூறை கொள்ளைகளை நிகழ்த்து வதையும், பணம் கொடுத்தோர் கட்சியில் சேர்ந்து அவர்களுக்காக யுத்தம் செய்வதையும் தங்கள் சுபாவமாக ஏற்றுக் கொண்டு விட்டார்களே! இந்த நிலையில் எங்களை ஒரு கோஷ்டியார் தாக்கிக் கொள்ளை அடித்துச் சிப்பாய்களையும் கொன்று விட்டதுமன்றி தாங்கள் அனுப்பிய பெண்ணையும் அபகரித்துச் சென்றார்கள்! நான் ஒருவன்தான் மிஞ்சினேன்!" என்று கூறினான்.

அவ்வளவில், விட்டோபா, "ஐயோ, இப்படியா நடந்தது?" என்று மிகவும் தாபப் பட்டு, "இதை நீயாவது பின்னர் வந்து சொல்லியிருக்கலாமே! நான்தான் புதுச்சேரி வரச் சொன்னேனே! ஒருவேளை உனக்கு வேறு வேலைகள் போலும்" என்று சொல்லி,

"என்னது என்று புரியவில்லை. நாட்டில் நான் எடுக்கும் காரியங்கள் எல்லாம் நஷ்டமாகின்றன, நஷ்டமாகின்றன" என்று புலம்பியவாறு, வர்மனுக்கு விடை கொடுத்தான்.

பிறகு வேன்லாறோடு வர்மன் கலந்து கொள்ள, "வர்மா, அது யார்?" என்று அவர் கேட்டார்.

"விட்டோபா என்னும் வர்த்தகராம். புதுச்சேரியாம். தங்களுக்குத் தெரியாதோ?" என்று கேட்டான்.

"வர்மா! அந்த ஆளைப் பல இடங்களில் பார்த்திருக்கிறேன். அவன் ஒரு பிரெஞ்சு உளவாளியாக இருக்கும். ஜாக்கிரதையாக இரு! இங்கே திருமலைக்கு வந்திருக்கிறானே! என்ன காரணம் இருக்கும் புரியவில்லையே, தூப்ளேயே அனுப்பியிருப்பாரோ!" என்று கூறினார்.

"அப்படியானால் உங்களை அவர் நிச்சயம் அடையாளம் கண்டிருப்பார் அல்லவோ!" என்று கேட்க,

"நிச்சயம் கண்டு கொண்டிருப்பான்.

புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது

ஏற்கெனவே பால் அடங்கியது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரண சக்திகளை முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. அதிக முழுமையான திட உணவு.

உடல் நலத்தின் உறைவிடம்—***க்ளாக்ஸோ***

---

**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்: உங்களது பிரதியைப்பெற தபால் மற்றும் இதர செலவிற்கு ரூ. 1/— தபால்தலை உள் வைத்து எழுதுவீர் இம்முகவரிக்கு—தபால் பெட்டி எண் 19119, (FCM-19) பம்பாய் 400 025.

---

CLARION/B/GX/4/203 TAM

# தாவண்கெரே

## ஃபாஷன் துணிரகங்கள்



டெரின் பருத்தித்
துணிகள் அணிந்து
ஸ்டைலாயும் சுகமாயும்
இருந்துடுவீர்!

**தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்.,**
ஹனுமந்தப்பா கட்டிடம்,
சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே-577 002.

ஷோ ரூம்கள்:
காவேரி பவன், பெங்களூர்-560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி-580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே-577 002.

THOMAS/8402-B/TAM

நான் யார் கட்சியும் கிடையாது. இந்த நாட்டுச் சமயத்தவனும் இல்லே. எனவே இவன் இங்கே ஏன் வந்தான்! என்று யோசித்திருப்பான்!'' என்று கூறினர்.

பிறகு வரும் யாத்திரிகரை அவர்களாகவே அழைத்து உணவு போடும் பல மடங்களில் ஒன்றில் புசித்துவிட்டு, சற்று இளைப்பாறி விட்டு,

பிறகு மாலையில் மலையிலிருந்து இறங்க ஆரம்பித்தார்கள்.

முன் இரவில் திருப்பதி சேர்ந்து, அங்கே சத்திரத்தில் தங்கிவிட்டு, வேன்லான் கொண்டு வந்திருந்த குதிரைகளில் இருவரும் ஏறிக் கொண்டு விரைவில் பொம்மராஜு பாளையம் போய்ச் சேர்ந்தார்கள்.

வேன்லான் தங்கிக் கொள்ள,

வர்மன் நேராக கார்வேட் ராஜாவின் மாளிகைக்குப் போய்ச் சேர்ந்தான்.

உள்ளே ராஜா வழக்கமாக இருக்கும் கொலுமண்டபத்தில் அவரைத் தேடிப்போக,

அங்கே அவர், இல்லாமல் யோசிக்கும் போது,

ஒரு சிப்பந்தி அவனை அழைத்துப் போய் தனி அறை ஒன்றில் கொண்டு விட்டான்.

உள்ளே இருந்த நிசப்தமும் லேசாக எழுந்த கஷாய நெடியும் வர்மனைச் சற்றுத் துணுக்குற வைத்தது.

உள்ளே மெல்லடியிட்டுப் போக, கார்வேட் ராஜா, ஒரு மஞ்சத்தில் பாதித் திறந்த கண்ணோடு படுத்திருந்தார்.

அருகில் ராணியார் நின்று கொண்டிருந்தார்.

''பிரபுவுக்கு என்ன?'' என்று வர்மன் கேட்க,

''நேற்று இரவிலிருந்து நினைவு இல்லாமல் இருக்கிறார்'' என்றார் ராணியார் துக்கத்துடன்.

''பிரபு! பிரபு! திருமலே போய் வந்தேன் பிரபு'', என்று அருகில் போய்க் கூறினான் வர்மன்.

ராஜாவிடமிருந்து எந்த சைகையும் வரவில்லே.

பாதித் திறந்த கண்கள் அப்படியே இருந்தன.

மூச்சு மட்டும் இழுத்து இழுத்து விட்டுக் கொண்டிருந்தார்.

கஷாய, மருந்து வர்க்கங்கள் அங்கே இருப்பதைப் பார்த்து,

அரண்மனை வைத்தியர் கவனித்து வருகிறார் என்பதைப் புரிந்து கொண்டான்.

வைத்தியரும் இதரர்களும் அடுத்த அறையில் சித்தமாகக் காத்திருந்தார்கள்.

வர்மன் அந்த அறைக்குப் போக, அங்கே தென்பட்ட காட்சி வர்மனைத் திடுக்கிட வைத்தது.

இங்கே என்ன நடக்கப் போகிறது?

சூழ்நிலே கலக்கும்படியாக இருக்கிறதே என்று நினைத்து, ஸ்தம்பித்த பாதங்களுடன் நின்றான்.

இதயம் படபட என்று அடித்தது.

(தொடரும்)

## நிசப்த தவம்

பத்ரிநாத்கேதார்நாத்யாத்திரையில்பயண விடுதியில் ருத்ரப்ரயாகில் தங்கினேன். விடியற்காலை 4 மணிக்கு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். பனிப் பாறைகளை உருக்கி உருட்டிச் செல்லும் நதி. ஆழ்ந்த நிசப்தத்தில் இமயச் சிகரங்களும் அடர்ந்த கானகங்களும். இயற்கையின் இந்த ஞானத் தவம் எனக்குள் ஏற்படுத்திய எண்ண அலைகளை விவரிக்க இயலாது. ஏதோ ஜன்ம சாபல்யம் கிட்டிய நிறைவு.

சேலம்—16, ஜானகி விஸ்வநாதன்.

## காலடியில் தவழ்ந்த மேகங்கள்

அது அருணாசலப் பிரதேசம். இராமகிருஷ்ண மிஷின் பள்ளியில் பணியாற்றிய எனக்கு கோன்சா என்னும் இடத்திற்குச் செல்ல ஒரு வாய்ப்புக் கிட்டியது. காலடியில் மேகக் கூட்டங்கள் தவழ்ந்து சென்றன. சுற்றிலும் திக்பாலகர்கள் போல் பச்சைத் தாவர ஆடை போர்த்து இமயம். நேரே தெரிந்த நடுவில் உள்ள மலையில் வீடுகளை அடுக்கி வைத்தது போன்ற காட்சி பிரும்மாண்டமான இயற்கை ஓவியம் வரைந்து விட்டு ஓவியர் ஒரு மூலையில் கையெழுத்திட்டது போன்று என்னைக் கவர்ந்தது.

சேலம்—3, சி. மயில்வாகனன்.

## தொட்டுப் பார்க்க ஆசை

மத்திய பிரதேசத்தில் ஜபல்பூரை அடுத்து பேராகாட் என்று சில குன்றுகள். ஓர் ஏரியைச் சுற்றிலும் அவை சூழ்ந்திருக்கும். வெள்ளை வெளேரென்று சலவைக்கல் குன்றுகள். அவற்றைத் தொட்டுப் பார்க்க வேண்டுமென்று ஓர் ஆசை தோன்றும். பசுமையான மரங்கள் அடர்ந்த சூழ்நிலையில் நீல ஏரியின் அருகே அந்த வெண்பளிங்குக் குன்றுகள் இறைவனின் படைப்பாற்றலுக்கு மௌனச் சாட்சியங்களாய் நிற்கும் அழகு இருக்கிறதே, அதை எப்படி வர்ணிப்பது?

கோவை—11, என். சாந்தா ராமமூர்த்தி

## விடுப்பில் போன நிலா

சாம்பல் நிறத்தில் சோம்பித்திரியும் கர்ப்ப மேகங்கள் சூழ்ந்த 'முலண்ட்' மலைப் பிரதேசம். கட்டிடக் காடுகளின் மத்தியில் வெள்ளிக் கம்பிகள் போன்று தூரத்தில் வழியும் சின்னஞ்சிறு நீர் வீழ்ச்சிகள். மழைக் காலத்தில் வருண பகவானுக்கு வானத்தை விட்டுக் கொடுத்து விட்டு 'விடுப்பில் போயிருந்த நிலா. இவை பம்பாய்க்கருகில் உள்ள முலாண்டு விஜயத்தில் என் மனசை விட்டகலாத இயற்கைக் காட்சி.

சென்னை—33, க. ரா. கல்யாணி.



• கொடைக்கானல் கோக்கர்ஸ்வாக்கிலிருந்து காட்சி.



• பத்ரிநாத்.

• ஜபல்பூர் — சலவைக்கல் குன்றுகள்.

# வாசகர் பங்கு

# இயற்கைக் காட்சி





* ஜோக் அருவி.



## சால்வை போர்த்திய காடுகள்

நிச்சயமற்ற சீதோஷ்ணமும் நிலை கொள்ளாத மக்களும் உள்ள நாகாலாந்துக்கு ஒரு மார்கழியில் பயணம் செல்லும் வாய்ப்புக் கிட்டியது எனக்கு. 80 கி. மீ. தூரம் மலையில் நெளியும் சாலையில் பாதுகாப்புச் சுவருக்குப் பதில் மண் மேவியிருந்தது. லேசான மழை வேறு. எட்டிப் பார்த்தால் கிடுகிடு பாதாளம். இதற்கு மத்தியில் வெண் பனிச் சால்வை போர்த்த கரும் பச்சைக் காடுகளின் கண் கொள்ளாக் காட்சியை மறக்கவே முடியவில்லை.

சென்னை—11. ஜி. சித்ரா.

## ஏன் வேண்டும் கோடிக் கண்கள்?

அமெரிக்காவுக்குச் சென்றபோது நயாகராவைப் பார்க்கும் வாய்ப்பு கிட்டியது. நேரில் பார்த்த போது கொட்டும் மழை வேறு. வானளாவிய அதன் உயரமும் வேகமும் பிரமிக்கச் செய்துவிட்டன. அதல பாதாளத்தில் 'ஹோ' வென்ற பேரிரைச்சலுடன் அது விழும் ஓசை; அலைகளுடன் சீறிப் பாயும் அதன் கம்பீரம்; அம்மம்மா, வர்ணிக்க முடியாது! அருவி விழும் இடத்திற்கருகே ஒரு படகில் சென்ற போதுதான் அந்த இயற்கை எழிலைக் காணக் கண் கோடி வேண்டும் என்பதற்குப் பொருள் புரிந்தது.

பம்பாய்—5. கலையரசி குமரேசன்.

## ஆரஞ்சு சூரியனும் காவல் வீரர்களும்

டார்ஜிலிங் 'டைகர் ஹில்'லில் சூரியோதயம் காணச் சென்றோம். இருள் பிரியும் போது ஒன்றன் மீது ஒன்றாக வானவில்களை அடுக்கி வைத்தாற் போல் கீழ் வானம் முழுவதும் வண்ண மயம். பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஆரஞ்சு வண்ணச் சூரியன் மேலெழுந்தான். தன் தங்க ஒளியால் அவன் நகரைக் குளிப்பாட்டினான். சுற்றிலும் காவற் படை வீரர்கள் போல் நிற்கும் பைன் மரங்கள். எண்ணற்ற வண்ணங்களில் பூத்துக் குலுங்கும் மலர்த் தோட்டங்கள். அன்று அடைந்த பரவசத்தை என்னென்று சொல்வது?

நியூ டெல்லி—58. திருமதி ராஜம் பார்த்தசாரதி.

## எதிரொலியில் ஏழு சுவரங்கள்

கர்நாடகாவில் உள்ள தர்மஸ்தலாவுக்குக் குடும்பத்துடன் சென்றிருந்தோம். ஒருவர் கையை ஒருவர் பற்றிச் செல்வது போன்று தொடர்ச்சியான மலைகள். காற்று வீசி மலைகளின் மீது மோதி எதிரொலிப்பது ஏழு ஸ்வரங்கள் போலிருந்தது. மலையோடும் மேகங்களோடும் கொஞ்சி விளையாடி விட்டு சூரியன் மறைந்த அந்த மாலை நேரத்தை என்னால் மறக்க முடியாது!

சென்னை—24. ஆர். விஜயலக்ஷ்மி

## பௌடர் போட்ட சிகரங்கள்

கங்கையின் உற்பத்தி ஸ்தலமாகிய கோமுக்கிலிருந்து 17 கி.மீ. தூரத்தில் உள்ளது கங்கோத்ரி. பெரிய அருவியில் நீர் பொழியும் போது புகை ஆவி பறக்கிறது. அதில் சூரிய கிரகணம் பட்டு பல வானவில்கள் தோன்றுகின்றன. நீரால் பாறைகள் அரிக்கப்பட்டு வழ வழப்பான பல வடிவங்களிலும், பல வண்ணங்களிலும் காணப்படுவது பிரமாதம். மழை பெய்து விட்டாலோ பனித் துளிகளால் மலைச் சிகரங்கள் பௌடர் போட்டுக் கொள்வது போல் காட்சியளிக்கின்றன.

பவானி—2. என். ஜெயபிருந்தா.

## சாந்தியின் சரணாலயம்

மேட்டுப்பாளையம் தாண்டிக் கல்லாறு செல்லும் வழியில் இரு பக்கமும் வானளாவி வளர்ந்து நிற்கும் பாக்கு மரங்கள். சிற்றில் சிதைக்கும் சிறு குழந்தை போல் கற்களில் தவழ்ந்தோடும் கல்லாறு. என்னோடு விளையாட வாயேன் என்று அழைப்பது போன்ற சலசலப்பு. நிழல் மரங்கள். அது சாந்தியின் சரணாலயம். மறக்க முடியாத காட்சி.

துடியலூர். ஆர். லக்ஷ்மி

## ஏன் மறக்க வேண்டும்?

கர்நாடக மாநிலத்தில் ஜோக் அருவிக்குச் செல்லும் வழியில் ஒரு வளைவு. பஸ்ஸை நிறுத்தி விட்டு இறங்கினோம். தண்ணீர் சொரியும் பேரரவம். அதை மீறி மூங்கில் கூட்டங்களிடையே ''கூகூ. கீச் கீச்' என்று பல பறவைகளின் இனிய கீதங்கள். விமானங்கள் பறக்கின்றனவோ என்று பிரமிக்க வைக்கும் கழுகுக் கூட்டங்கள். நாசியை வருடும் இனிய சுகந்தம். மனசில் ஆழச் செதுக்கியது போன்ற அந்தக் காட்சியை எப்படி மறப்பேன்? ஏன் மறக்க வேண்டும்?

சேலம்—7. எஸ். சென்ன கேசவன்

## நீர்த்துறை மீன்கள்

சுமார் 2½ மணி நேரம் சந்தன மரங்களும் மூங்கிலும் அடர்ந்த காட்டினுள் பிரயாணம் செய்யும் அனுபவத்துக்குப் பின் சிருங்கேரியை அடைந்தோம். பளிங்கு நிர்மலமாக ஓடுகிறாள் துங்கபத்திரை. ஒன்றரை அடி நீளமுள்ள மீன்கள் துள்ளித் துள்ளி நீரை விட்டு மேலெழுகின்றன. துங்கபத்திரையின் நீர்த்துறையில் நீராடும் போது எவ்வளவு சுகம்!

பம்பாய்—5. சுந்தரா ரவீந்திரன்.

## மறைய மறைய ஒரு மூடுபனி

கொடைக்கானல் சென்றபோது கோக்கர்ஸ் வாக்கில் மூடுபனி விழும்போது அருகில் உள்ள பள்ளத்தாக்கு தெரியாமல் மறைந்து போகிறது. அதியற்புதமான இந்த இயற்கைக் காட்சி மறக்க முடியாதது.

சென்னை—14. வி. ஆண்டாள்.

## ஊமை போல் உணர்ந்தேன்

பெங்களூரில் அல்சூர் ஏரியின் கரையில் ஒரு வீடு. ஒரு பௌர்ணமி மாலையில் சந்திரன் மெதுவாகப்பிறந்துகொண்டிருந்தான். ஏரித் தண்ணீர் பாதரசப் பரப்பாக பளபளத்தது. இந்த அற்புதக் காட்சியைக் கண்ட நான் ஏன் ஒரு கவிஞனாகவோ ஓவியக் கலைஞனாகவோ பிறக்கவில்லை என்று ஏங்கினேன். பேசத் துடிக்கும் ஊமை போல் உணர்ந்தேன்.

பெங்களூர்—42. மீனாக்ஷி கைலாசம்.



* நயாக்ரா.

**ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**எஸ். சென்னகேசவன்,**
**கோட்டத் தந்திப்**
**பொறியாளர் அலுவலகம்,**
**சேலம்—636 007.**

''இதற்குத்தான் இரண்டு நாளாய்த் தலையில் அடிச்சுக்க றேன். டாக்டர் யார்கிட்டேயாவது உடம்பைக் காட்டறதுதா னேன்னு. அதைச் செய்யாமல் இப்படி இருக்கிறவங்க பிரா ணனை வாங்கினா எப்படி? சே! இதில் கூடவா மிச்சம் பிடிச்சுச் சேர்க்க நினைக்கணும்!

''சாரு.''

இரண்டு முறை அவன் அவள் பெயரைச் சொல்லி அழைத்தும் சாருமதி அதைக் காதில் போட்டுக் கொள்ளாமலே உட்கார்ந்திருந்தாள்.

படுக்கையில் சற்று ஒருக்களித்தாற்போல் புரண்டு சரவணன் அவளை ஏறிட்டான்.

சிறிது தள்ளி மேசைக்கு எதிரே இருந்த ஒரு நாற்காலியில் பக்கக் கோணத்தில் வரையப்பட்ட ஓர் அற்புத ஓவியம் போல் தெரிந்தாள் சாருமதி.

இவ்வளவு மென்மையான தோற்றத்துக்குள் இப்படி ஓர் ஆணவமா!

நம்பவே கஷ்டப்படுகிறான் சரவணன்.

மெல்லிய குரலில் கேட்டான்: ''கொஞ்சம் காப்பியாவது சாப்பிடலாம்னு நினைக்கிறேன்.''

கையில் இருந்த வார சஞ்சிகையை மேசை மேல் விசிவிட்டு 'விருட்' என்று எழுந்தாள் அவள்.

சுமார் கால் மணி நேரக் காத்திருப்புக்குப் பின் சாருமதி காப்பி டம்ளருடன் வெளிப்பட்டாள். சரவணனின் கட்டில் ஓரம் வைக்கும் முன்பே சொன்னாள்:

''இதற்குத்தான் இரண்டு நாளாய்த் தலையில் அடிச்சுக்கறேன். டாக்டர் யார்கிட்டேயாவது உடம்பைக் காட்டறதுதானேன்னு. அதைச் செய்யாமல் இப்படி இருக்கறவங்க பிராணனை வாங்கினா எப்படி? சே, இதில் கூடவா மிச்சம் பிடிச்சுச் சேர்க்க நினைக்கணும்.''

சரவணனுக்குக் காப்பி அதிகமாகவே கசந்தது.

சுர' வேகத்திலா அல்லது 'சுர்' என்று அவன் குத்திக் காட்டிய பேச்சிலா?

எதுவானாலும் கால் டம்ளருக்கு மேல் இறங்கவில்லை.

இவன் டாக்டரிடம் போகாதது சிக்கனத்தைக் கருதியா?

தொட்டதற்கெல்லாம் அப்படி ஓடிப் பழக்கம் இல்லாதவன் சரவணன். அவனைப் பொறுத்தவரை இதைவிடப் பெரிய சுரம் தலைவலியெல்லாம் ஒரு சாதாரணச் சுக்குக் கஷாயத்திலும் நெற்றிப் பத்திலுமாய் விரட்டி அடித்திருக்கிறாள் அவன் அன்னை. இயற்கையாகவே அவன் உடம்பில் அத்தகைய எதிர்ப்புச் சக்திகளோடு வாழப் பழகி இருந்தான்.

ஆனால் இதுவே சாருமதிக்கு ஒன்று என்றால் இவன் துடித்துத்தான் போய்விடுகிறான். தேவையானதைச் செய்துவிட்டுத்தான் மறு காரியம் பார்க்கிறான். என்னதான் செய்யட்டுமே அவள் இவனைக் குறை சொல்லித்தான் தீர்ப்பாள்.

அவளுக்கு எதிலுமே பணம் ஒரு பொருட்டல்ல. சொல்லப் போனால் வாங்குகின்ற பொருள் வாழ்கின்ற வாழ்க்கை எல்லாவற்றையுமே பணச் செலவை வைத்துத்தான் எடை போட்டுக் கொண்டிருந்தாள் அவள்.

சரவணன் இதுபோன்ற விஷயங்களில் நிறைய வித்தியாசப்பட்டவன். எதிலும் இயன்றவரை எளிமையாய் இருக்க முயல்பவன்.. அவனுடைய இளவயதுச் சூழ்நிலை பணம் என்பது மனித வாழ்க்கையின் ஒவ்வொரு அசைவுக்கும் எவ்வளவு முக்கியமானது என்பதைச் சற்று அதிகப்படியாகவே உணர வைத்திருந்தது. கல்யாணமான இந்த இரண்டு வருடங்களில் அவளிடம் பலமுறை அதைப் பற்றி எல்லாம் பேசிக் கூட இருக்கிறான்.

ஆனால் சாருமதி அவன் பேச்சையும் செயல்களையும் வேறு கோணத்தில் எடுத்துக் கொண்டாள்.

சமீபத்திய உதாரணம்: இரண்டு மாதமாய் டி.வி. ஒன்று வாங்க வேண்டுமென்று சாருமதி வற்புறுத்தி வந்தாள். இன்னும் சில மாதங்களில் தனக்குக் கிடைக்க இருக்கும் போனஸ் பணத்துடன் ஏரளவு சேமிப்புத் தொகையும் சேர்த்து அதை வாங்கித் தருவதாய் வாக்

# ஓர் உண்மையின் கண்ணாம்பூச்சி

கமலா நடராஜன்



களித்திருந்தான்.

தான் அவ்வளவு ஆசைப்பட்ட ஒரு பொருளுக்குத் தன் கணவன் ஆறு மாதம் காத்திருக்கச் சொன்னதை சாருமதி ஏதோ அவமானமாய் உணர்ந்தான்.

வீடு கொள்ளாத பாத்திரம் பண்டங்கள் மிக்சி கிரைண்டர் இன்னும் ஸ்கூட்டர் வரை அவளுக்காக வாங்கிக் கொடுத்த அண்ணன் ராமமூர்த்தியிடம் ஒருவார்த்தை இதைப்பற்றிச் சொன்னால் போதும். மறுநாள் கலர் டி.வி.யே வந்து இறங்கிவிடும். எனினும் இன்னமும் பிறந்த வீட்டில் போய் இதை எல்லாம் யாசிப்பது இவளுக்கோ, மாதம் ஆயிரத்து ஐநூறுக்கு மேல் சம்பாதிக்கும் இவள் கணவனுக்கோ பெருமை தரக் கூடிய விஷயமா?

சாருமதியின் மனத்திற்குள் உண்டான வெறுப்பு நாளடைவில் சரவணனுக்கு இவள் செய்ய வேண்டிய சின்னச் சின்னக் கடமைகளைக் கூடப் பெரும் சுமைகளாகத் தோன்றி, உறுத்துமாறு செய்துவிட்டது.

* * * * *

அன்று மதியத்திற்குமேல் சரவணனுக்குத்





மூட்டைப் பூச்சி 1: அண்ணே! மாடி மேல தூங்கிட்டு இருக்கிறவரை போய்க் கடிச்சிட்டு வரலாம் வா!

மூட்டைப் பூச்சி 2: நான் வரல்லே! எனக்கு பிளட் பிரஷர்! மாடிப்படி ஏற முடியாது!

—கடலூரர் கன்னியப்பன்.

தலைவலி கூட விட்டிருந்தது. மெதுவாக நாளை முதல் வேலைக்குப் போய் வரலாம் என்கிற தீர்மானத்திற்கு அவன் வந்த போதுதான்—

சாருமதி பெட்டிக்குள் தனது துணிமணிகள் சிலவற்றை எடுத்து அவசரமாய் அடுக்கி வைப்பதைக் கவனித்தான்.

"ஊருக்குப் போய்ச் சில நாள் இருந்துட்டு வரலாம்னு நினைக்கிறேன்" — அவள் எங்கோ பார்த்தபடி சொன்னாள்.

மௌனமாக எழுந்தான்.

பீரோவைத் திறந்து சில நோட்டுக்களை எடுத்துச் செலவுக்கென்று அவளிடம் நீட்டியபோது—

அந்த உடனடி அனுமதி அவளை அவமானப்படுத்தியது போல் கூட இருந்தது.

அவன் கொடுத்த பணத்தை அலட்சியமாய்ப் புறக்கணித்தவள் வேறு எதும் பேசாமல் புறப்பட்டு விட்டாள்.

அப்பாவை நினைத்துக் கொண்டாள். பிஸினஸில் எக்கச்சக்கமாகச் சம்பாதித்தவர். கார், பங்களா, தோட்டம் என்றும் கையில் நிறைய ரொக்கம் என்றும் சொகுசான வாழ்க்கை. இரண்டே பிள்ளைகள். சாருமதியும், ராமமூர்த்தியும்.

படித்துவிட்டு வேலையில் இருந்த ராமமூர்த்தி அப்பா காலமான பிறகு இவர்களுடைய அலுமினியத் தொழிற்சாலையைக் கவனிக்கப் பொறுப்புள்ள ஆள் இல்லாத காரணத்தால் வேலையை ராஜிநாமா செய்துவிட்டுத் தானே ஏற்று நடத்தி வருகிறான். சாருமதியின் கல்யாணத்தைக் கூட அவன் தான் பிரமாதமாய்ச் செய்து முடித்தான்.

என்ன செய்து என்ன — சாருமதியைப் பொறுத்த வரை திருப்தியான வாழ்க்கை இல்லை.

* * * * *

சென்னையில்—

அண்ணன் வீட்டு வரவேற்பில் அவளுக்கு எந்தக் குறையும் இல்லை. ஆனால் மற்ற அவர்களது நடவடிக்கைகளில் ஒரு செயற்கைத் தனம் இழையோடியது.

வீட்டில் இருந்த ஆடம்பரப் பொருட்கள் அத்தனையும் காணாமல் போயிருந்தன.. காருக்குப் பதில் அண்ணன் ஸ்கூட்டரில் போய் வந்து கொண்டிருந்தான். வீடியோ டேப் ரெக்கார்டர் எல்லாமே ஒரே சமயத்தில் பழுது பார்க்க எடுத்துச் செல்லப்பட்டிருப்பதாய்க் கூறப்பட்டது பச்சைக் குழந்தைகள் கூட நம்பக் கூடியதாய் இல்லை.

இன்னும் அண்ணியின் கழுத்தில் கிடந்த சங்கிலிகள் வைரத் தோடு இவை எல்லாம் பெட்டிக்குள் இருக்கலாம் என்கிற சாருமதியின் எண்ணத்திலும் இரண்டு வெள்ளிக்கிழமை கடந்தவுடன் சந்தேக நிழல் தட்டிற்று.

அண்ணி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் பட்டுப் புடவைதான் கட்டுவாள். அத்தனை நகைகளையும் அள்ளிப் போட்டுச் சுமக்க முடியாமல் சுமந்து நிற்பாள். இப்போதைய மாறுதல் இவளுக்குப் பெரும் குழப்பமாய் இருந்தது.

* * * * *

அன்றிரவு—

வெகுநேரம் உறக்கம் இல்லாமல் புரண்டு கொண்டிருந்த சாருமதி சற்றே கண் அயர்ந்த போது திமர் என்று விழிப்பு வந்தது.

பவர் கட்டின் காரணமாய் மின் விசிறி நின்றிருக்க, தொப்பலாய் உடல் முழுவதும் வியர்த்திருந்தது.

அறையை விட்டு மெதுவாக வெளியே வந்தாள்.

கூடத்துக்கு மேல் இருந்த ஜன்னல் வழியே நிலா வெளிச்சம் உள்ளே வர கட்டிலில் அண்ணனையோ, அண்ணியையோ காணவில்லை.

படி ஓரம் சென்றவளின் காதில் சன்னமாய்ப் பேச்சுக் குரல்.

அண்ணனும் அண்ணியும்தான்.

"முடிவா ஃபாக்டரியை வித்துடறதுன்னே தீர்மானம் பண்ணிட்டீங்களா?" அண்ணி அழாத குறையாகக் கேட்கிறாள்.

"வேறே வழியே இல்லே சுகுணா. எனக்கே வேதனையாய்த்தான் இருக்கு. இந்த நிறுவனத்தை வைத்து அப்பா எப்படி எல்லாம் சம்பாதித்தாரோ அதைத் தாண்டிக் கண்ட வழிகளில் செலவும் பண்ணி இருக்கார். அவரைச் சொல்லியும் குற்றமில்லே. அம்மாவுக்கு அப்புறம் ஒரு கட்டுப்பாடில்லாத வாழ்க்கை. நாற்பது வயதுக்குமேல் இரண்டாம் கல்யாணத்திலும் நம்பிக்கை இல்லே. குறுக்கு வழிச் செல்வந்தர்கள் சிலரின் கூடாத சிநேகம். குடிப் பழக்கம் இன்னும் என்னென்ன வழிகளிலோ பணத்தை வாரி விட்டிருக்கிறார். நான் பொறுப்பேற்ற பிறகுதான் இந்த ஃபாக்டரி எவ்வளவு நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது என்பது புரிந்தது. புரிந்து என்ன செய்வது? எனக்குத் தெரிந்த தொழில் முறை உத்திகள் அத்தனையையும் பயன்படுத்திப் பார்த்துவிட்டேன். பலன் என்னவோ பூஜ்யம்தான். இதற்கிடையில் வாழ்க்கைத் தரத்தையோ வசதிகளையோ

சட்டென்று குறைத்துச் சொன்னவுடன் முடியாத நிலை. நான் செய்த புத்திசாலித்தனம் செலவோடு செலவாகச் சாருமதியின் கல்யாணத்தை முடித்ததுதான். இப்போது எல்லாமாகச் சேர்ந்து ஏகப்பட்ட கடன். ஃபாக்டரியை விற்றுத் தீர்ப்பதைத் தவிர வேறு வழி இல்லை."

சாருமதிக்குக் காலுக்கடியில் இருந்த படிக்கட்டுகள் அத்தனையும் திடீரென்று சரியத் தொடங்கியது போல் இருந்தது.

சட்டென்று சமாளித்துக் கைப்பிடிச் சுவரில் சாய்ந்து கொண்டாள்.

சிறிது நேர மௌனம்.

அண்ணி சொன்னாள். "சாருமதிக்கு இதெல்லாம் தெரிய வேண்டாம். பாவம் மனசு சங்கடப்படுவாள்."

"என்றைக்கு இருந்தாலும் தெரிய வேண்டியதுதானே சுகுணா. அதற்காக என்ன செய்வது? ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் அவள் காதுக்கு எட்டவே கூடாது."

"என்ன?" அண்ணி கேட்க, சாருமதியும் தன் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டாள்.

"சரவணனைப் போல் ஒருவனைக் கணவனாக அடைய இவள் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அவன் நம்மைப் போல் அல்ல. உழைப்பின் பெருமையும் பணத்தின் அருமையும் உணர்ந்தவன். அதேசமயம் நம் போன்ற நிலையில் சிக்கியவர்களுக்கு உதவும் பெருந்தன்மை. ஆறு மாதத்துக்கு முன் ஓர் ஐயாயிரம் ரூபாய்க் கடனில் என் மானப் பிரச்னையே ஊசலாடிக் கொண்டிருந்த நேரம். அவனிடம்தான் உதவி கேட்டேன் நேரில் போய்க் கூட இல்லை. நிலைமையை விளக்கி ஒரு கடிதம்தான். அடுத்த நான்காவது நாளே பாங்கில் அவனுடைய ஃபிக்சட் டெபாசிட்டிலிருந்து கடனாகப் பணம் பெற்று எனக்கு டிராஃப்ட் அனுப்பிவிட்டான். கூடவே ஒரு கடிதம். 'இதைத் திருப்பித் தர நீங்கள் அவசரப்பட வேண்டாம். சௌகரியப்பட்ட போது கொடுங்கள். ஒரே ஒரு வேண்டுகோள். சாருமதிக்கு மட்டும் இது தெரியவே கூடாது. பாவம் அவள். வாழ்க்கையின் மேட்டுப் பகுதிகளிலேயே சஞ்சரித்தவள். பள்ளங்களைப் பற்றி அறியாதவள். பிறந்த வீட்டைப் பற்றி அவளுக்கு எப்போதுமே ஒரு பெருமை உண்டு. விஷயம் தெரிந்தால் தாழ்வு மனப்பான்மையில் கரைந்தே போய் விடுவாள். மற்றபடி உங்கள் கஷ்டத்திலும் பங்கேற்க எனக்கு வாய்ப்பளித்ததற்கு நன்றி' எவ்வளவு பெருந்தன்மை பார் சுகுணா. ஆயிரத்தில் ஒருவன் இப்படிக் கிடைப்பானா?"

சாருமதி எப்படித் தடுமாறி விழாமல் படிகளில் இறங்கினாள். படுக்கையில் போய் விழுந்தாள் என்பது அவளுக்கே தெரியவில்லை.

விடிந்தபோது—

"ஏன் அண்ணா நீ வேலையைவிட்டு வந்தாயே அது பிரைவேட் கம்பெனிதானே. மறுபடியும் முயற்சி பண்ணினா அங்கே வேலை கிடைக்கும் இல்லையா?"

ராமமூர்த்தி சற்றுத்திகைத்துப் போனவன் சொன்னான்: "கிடைக்கலாம் சாரு. ஆமாம் நீ எங்கே இப்போ அவசரமாக் கிளம்பறே?"

"ஊருக்குத்தான் அண்ணா. பாவம் அவர், நான் இல்லாமல் அங்கே எவ்வளவு சிரமப் படறாரோ!" — அவள் அவசர அவசரமாய்த் தன் துணிமணிகளைச் சேகரித்தாள்.

வசுமதிவிடைபெற்றுக்கொள்ளாமலே வெளியேறினதை அரவிந்தன் லட்சியம் செய்யவில்லை. ஆனால் உள்ளூற அவளுக்காக வேதனைப்பட்டான். அவள் நடந்து கொள்ளும் முறை சரியில்லை என்று வாய் வார்த்தைகளால் உணர்த்தியாகி விட்டது. ஆனால் வசு அவனுடைய புத்திமதியைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அவன் கல்யாணமானவன், அவனுடைய மனைவியின் பெயர் மாயா என்பதை அவள் ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. மாயா ஒரு மன பலவீனம் கொண்ட நோயாளி, அவளால் தாம்பத்திய வாழ்க்கை வாழவே முடியாது, ஒருநாள் இல்லாவிட்டால் இதை அரவிந்தனே உணர்ந்து தன்னை ஏற்றுக்கொள்ளுவான் என்று கணக்குப் போடுகிறாள் அவள். இப்படிப்பட்ட வசுமதியை — ஒரு நல்ல பெண்ணை — எப்படிச் சரியான திசைக்குத் திருப்புவது.

அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் வசுவின் அம்மா சாரதாவின் நினைவு வந்தது. அதே சமயம் மாயா வந்து மடிமேல் உட்கார்ந்து, ''அந்து!'' என்றாள்.

சாரதாவைத் தற்காலிகமாக ஓரமாக உட்கார்த்திவிட்டு, ''என்னம்மா?'' என்று கேட்டான்.

மாயாவின் கை அரவிந்தனுடைய ஒரு காதைத் திருகிக் கொண்டிருந்தது.

''சில சமயத்திலே என் கண்ணுக்கு இந்த வசுமதி சூர்ப்பனகை மாதிரித் தெரியறா...'' என்றாள் மாயா.

''ஊஹூம்... அப்படி நினைக்கப்படாது.''

''நினைக்கப்படாதுன்னு நீ சொல்றே, அந்து... ஆனா என்னாலே நினைக்காம இருக்க முடியலையே... அந்து... அந்து சூர்ப்பனகைகிட்டே ராமன் ஏமாந்து போகலே. நீ ஏமாந்து போய்டுவியா?''

''மாட்டேன் மாயா.''

''எனக்குத் தெரியும் அந்து. நீ நல்லவன்... ஒரு நாள் வசுமதி என்ன கேட்டா தெரியுமா?''

''தெரியாது.''

''அப்ப நீ பாத்ரூம்லே குளிச்சுட்டிருந்தே. நான் இங்கே உட்கார்ந்திருந்தேன். வசு என் கிட்டே வந்தா. பக்கத்திலே இடிச்சுண்டு உட்கார்ந்தா. யார் இடிச்சுண்டு உட்கார்ந்தாலும் எனக்குப் பிடிக்காது. தள்ளி உட்காருன்னேன். தள்ளி உட்கார்ந்தா. அப்புறம் அவ கேட்டா...'' மாயா நிறுத்தினாள்.

அரவிந்தன் மௌனமாக மாயாவை ஏறிட்டுப் பார்த்தான்.

''நீ பம்பாயிலே எப்பவாவது மெண்ட்டல் அசைலத்திலே இருந்திருக்கியான்னு கேட்டா.''

''நீ என்ன பதில் சொன்னே?''

''பதில் சொல்லலே...''

''குட், வெரிகுட் மாயா.''

''பளார்ன்னு அவ கன்னத்திலே ஒரு அறை அறைஞ்சேன்... அவ கன்னத்திலே என் விரல் பதிஞ்சுது. தப்பா, அந்து... தப்புன்னு சொல்லு. இனிமே அறைய மாட்டேன்.''

''தப்பு இல்லே மாயா... அவ இப்படிக் கேட்டதுக்கு நீ அறைஞ்சது தான் சரி... ஏன் இத்தனை நாளா இதை என்கிட்டே சொல்லலே, மாயா!''

''நீ கோபிச்சுக்குவியோன்னு பயம்?''

''நான் என்னிக்கும் உன்னைக் கோவிச்சுக்க மாட்டேன்.''

''ப்ராமிஸ்?''

''பிராமிஸ்!''

''அப்ப இன்னொரு நாள் வசுமதி இன்னொண்ணு கேட்டாளே, அதையும் சொல்லட்டுமா?''

''சொல்லும்மா.''

''நானும் நீயும் தனித்தனியா படுத்துக்கறோமா இல்லே ஒரே கட்டில்லே ஒரே மெத்தையிலே படுத்துக்கறோமான்னு கேட்டா.''

''இதுக்கும் அறைஞ்சியா, மாயா?''

''ஊஹூம்... நாங்க எப்படிப் படுத்துண்டாலும் உனக்குக் கட்டில்லே எடமில்லேன்னேன்!''

''வெரிகுட் மாயா.''

''வசுமதியும் நீயும் முன்னே லவர்ஸ் இல்லே?''

''லவர்ஸாத்தான் இருந்தோம், மாயா... ஆனா இப்ப இல்லே... இப்ப நான் வேறு ஒருத்தியை லவ் பண்றேன். அவ ஒருத்திதான் ஆயுசு போறவரை நான் லவ் பண்றபெண்ணா இருப்பா...''

# ஆகாச கங்கை

''அவ யார்னு எனக்குத் தெரியும்!''

''யார்னு சொல்லு.''

''எதுக்குச் சொல்லணும். உனக்கும்தான் அவ யார்னு தெரியுமே... காதை ரொம்பத் திருகிட்டேனா? வலிக்கிறதா?... நீ வேணும்னா பதிலுக்கு என் காதைத் திருகிக்கோ!''

அரவிந்தன் சிரித்தான்.

ஆனால் மாயா சிரிக்கவில்லை.

''இன்னிக்கு அவ அப்படி அழுதது எனக்கு உண்மையாப் படலே. அந்து. வசுமதி தொடக்கத்திலே எல்லாம் நடிப்பாளா?''

''தெரியலே.''

''ஒரு நாள் கேக்கறேன்!''

சொன்ன மாயா இறங்கினாள். முரட்டுத்தனமாக ரேடியோவைத் திருப்பினாள். விவித பாரதி அலறியது. மறுகணம் மாயா கூந்தலை அவிழ்த்தாள்... மின்சார விசிறியின் காற்றில் கேசம் அலைபாய்ந்தது.

மாயா வெறியுடன் ஆட ஆரம்பித்தாள்.

அரவிந்தன் திகைக்கவில்லை. இது பழகிப் போனதுதான். சாதாரண இயல்பில் நீண்ட நேரம் பேசினால், அதன்பின் ஒன்று அவள் மௌனத்தில் உறைந்து போவாள். அல்லது ராட்சசச் சிரிப்பில்பயமுறுத்துவாள். அல்லது ஆனந்த நடனத்தில் திளைப்பாள்.

அரவிந்தன் அவளை மறந்துவிட்டுச் சிந்


# பி.வி.ஆர்.




நித்தான். வசுமதியின் போக்கு வெகுவாக அவனைப் பாதித்தது. ஏன் அவள் மாயாவிடம் கேட்கக் கூடாத கேள்விகளைக் கேட்கிறாள்? அவன் தன் மணவாழ்க்கையில் மனைவியுடன் ஒரே கட்டிலில் தூங்கினால் என்ன, பிரிந்து உறங்கினால் என்ன? வசுமதி இந்த விஷயத்தில் இப்படி ஏன் அநாகரீகமான ஆர்வத்தைக் காட்ட வேண்டும்?

திடீரென்று அவளுடைய அம்மா சாரதா சிலநாட்கள் முன்பு அவனைத்தேடிக்கொண்டு வந்தது நினைவில் முட்டியது.

* * * * *

காலை பதினொரு மணி.

சாப்பாட்டு மேஜை முன் மாயாவும் அவனும் உட்கார்ந்திருந்தார்கள். இரண்டு வயதுக் குழந்தையைப் போல மாயா, தன் தட்டில் இருப்பதைச் சாப்பிடாமல், அந்துவின் தட்டிலிருந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தாள். பிறகு, திடீரென்று, ''அந்து நீ கவளம் கவளமா என் வாயில் போடு'' என்றாள். அரவிந்தன் சாம்பார் சாதத்தை நன்றாகப் பிசைந்து போனஸா ஒரு ஸ்பூன் நெய்யையும் போட்டு, அவளுக்கு ஊட்ட அவள் ரசித்துச் சாப்பிட்டாள்...

இந்தக் கட்டத்தில் தான் சாரதா படி ஏறி, ஹாலினுள் பிரவேசித்தாள்.

''யாரோ வந்திருக்கா... அவளையும் சாப்பிடச் சொல்லு, அந்து!'' என்றாள் மாயா.

அரவிந்தன் பார்த்தான்.

சாரதா.

''வாங்கம்மா... நீங்க வந்தது தெரியலே... இவ சொன்னா.''

''காதிலே விழுந்தது!'' என்ற சாரதா, ''ஏன் வாசக் கதவைத் திறந்து வைச்சிருக்கீங்க... எந்தவேளையிலே எவன் நூந்து எதை எடுப்பான்னு சொல்ல முடியாத காலம்!'' என்றாள்.

''சாப்பிடறேளா?''

''ஊஹூம்... அஷ்டலட்சுமி கோவிலுக்கு வந்தேன்... அப்படியே உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். இவதான் உன் பெண்டாட்டி மாயாவா? மகாலட்சுமி மாதிரி இருக்கா...''

''யாரு இந்த மாமி, அந்து?''

''வசுமதியோட அம்மா!''

''ஹூ மீன் வசுஸ் மதர்?''

''யெஸ், மாயா!''

''அப்ப இவளும் வசுமதியோட கட்சியா... அந்து எதுக்கு இவ வந்திருக்கா...''

''சும்மாத்தாம்மா.''

''கொழந்தே, நான் நல்லவ. உன் புருஷன் அரவிந்தன் நல்லவன்தானே? அது மாதிரி நானும் நல்லவ...''

''நீங்க முதல் தடவையா இந்த வீட்டுக்கு வந்திருக்கீங்க மாமி...? ப்ரிஜ்ஜிலேந்து ஏதானும் ட்ரிங்க் எடுத்துத் தரேன். ரசனா இருக்கு.''

''எனக்கும் ரசனா கொடு அந்து.''

''தரேன், மாயா.''

''நீங்க முதல்லே சாப்பிடுங்கோ'' என்ற சாரதா, ''நான் ஒண்ணு ரெண்டு விஷயம் பேசலாம்னுதான் வந்தேன், அரவிந்தன்'' என்றாள்.

''சொல்லுங்கோ...''

''வரவர வசுமதி சரியில்லே.''

''புரியும்படியாச் சொல்லுங்க, மாமி.''

''அதானே?'' — மாயா.

''தினசரி இங்கே வர்றா... அது சரியில்லேன்னு எனக்குப் படறது.''

''என்னை என்ன செய்யச் சொல்றேள்?''

''வரப்படாது... நானும் என் பெண்டாட்டியும் குடும்பம் நடத்தி வாழுற இடத்திலே உனக்கு வேலை இல்லேன்னு அடிச்சுச் சொல்லுங்கோ!''

''நான் அவளை வான்னு சொல்லலே, மாமி.''

''தெரியும். ஆனா அவளா வரான்னு நீங்க சும்மா இருந்தா, இப்ப நாங்க அவதிப்படற மாதிரி நீங்களும் ஒருநாள் அவதிப்படுவேள்!''

''ஏன் என்ன செய்யறா?''

''என்ன செய்யலே. வீட்லே முழுசா எட்டு மணி நேரம் இருக்கா. அதிலே ஏழு மணி தூக்கம். பாக்கி ஒரு மணியிலே பிசாசு பிடிச்சவ மாதிரிக் கத்தறா... பாத்திரத்தைத் தூக்கி எறியறா... ராத்திரி தூக்கத்திலே அழறா...''

''இதெல்லாம் எனக்குத் தெரியாது, மாமி!''



**அருள்வாக்கு**

நாடு, நகரம் முழுவதையுமே படையெடுப்பிலிருந்து ரக்ஷிப்பதற்காகச் செய்த முக்கியமான ஏற்பாடே கோட்டை கட்டுவது. ரொம்பப் பெரிசாகப் பலமாகச் செய்வது இது. அதனால்தான் 'என்ன கோட்டை கட்டிண்டிருக்கே!' என்று கேட்கிற வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. ராஜஸ்தான் ராணாக்கள் சித்தோரில் விசேஷமாகக் கோட்டைகள் கட்டினார்கள். சிவாஜியும் மகாராஷ்டிராவில் நிறையக் கட்டியிருக்கிறார். அரண் என்று கோட்டை. அகழ் என்று அதைச் சுற்றி ஜலம் இருக்கும்படி வெட்டுவது முதலானவற்றில் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் சிறப்புப் பெற்றிருந்தார்கள். திருக்குறளில் 'அரண்' என்றே பத்து அடி கொண்ட ஒரு அதிகாரமிருக்கிறது. பொது ஜனங்களுக்கு யுத்த அபாயமில்லாமல் பெரிய காப்பாயிருந்தது அரண்தான். அதனால்தான் தர்மத்துக்கு அரண், ஸத்யத்துக்கு அரண், என்றெல்லாம் பெரியவர்களைக் கொண்டாடும்போது சொல்கிறோம்.

கோட்டைக்கு ஸம்ஸ்கிருதத்தில் ''துர்கம்'' என்று பெயர். 'ஸுலபத்தில் பிரவேசிக்க முடியாதது' என்று அர்த்தம். இஹத்திலும்பரத்திலும்பெரிய ரக்ஷையாக இருக்கிற அம்பிகையை 'துர்கா' என்கிறோம். வடக்கே 'துர்க்' என்று முடிகிற அநேக ஊர்கள் அங்கேயெல்லாம் பூர்வத்தில் கோட்டைகள் இருந்ததைக் காட்டுகின்றன. கட் (gad) காடா (gada) என்று முடிகிற ஊர்களும் இப்படியேதான். தமிழ் தேசத்திலும் ஊத்துக்கோட்டை, புதுக்கோட்டை, செங்கோட்டை, பாளையங்கோட்டை என்று அநேக ஊர்கள் இருக்கின்றன. செஞ்சிக் கோட்டையும் வேலூர்க் கோட்டையும் டூரிஸ்ட் ஸெண்டர்களாக இருக்கின்றன. இவற்றிலே எத்தனையோ மர்மங்கள். பண்டங்களும், மநுஷ்யர்களும், (முக்கியமாக ஸ்திரீகள்) எதிரிகள் கையில் சிக்காமலிருப்பதற்காக நிலவறை என்று அண்டர்கிரவுண்டில் வைத்திருப்பது முதலான பல ஏற்பாடுகள்.

வியூஹம் மாதிரியே கோட்டையிலும் பல அமைப்பு முறைகள் உண்டு. கோட்டை நிர்மாணத்தாலேயே நாடு நகரத்துக்கு க்ஷேமம் உண்டாகும்படியாக அவற்றை சாஸ்திரவத்தாக, மந்திர பூர்வமாகப் பண்ணவும் வழி இருக்கிறது.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

''எப்படித் தெரிய முடியும்? வீட்டுக்குள்ளே நடக்கறது வெளியே வந்தாத்தான் வீட்டு மானம் போகுமே! அதுக்கு நீங்கதான் உதவி செய்யணும். என்னமோ இப்ப தொழிலேயும் பார்க்கிற. அதையும் என்னிக்காவது வெறி வந்து உதறி எறிஞ்சுட்டா எங்க குடும்பம் திண்டாடிப் போகும். மூத்த ரெண்டு பெண்களோட சம்பாத்தியத்திலே எங்க வண்டி ஓடாது. இவ கணிசமா தர்ற ஆயிரம் நிக்காம இருக்கணும்னு நீங்க ஏதானும் செய்யணும்!''

''இங்கே வரப்ப எப்பவும் போல சாதாரணப் பெண்ணாத்தானே இருக்கா அவ?'' என்றான் அரவிந்தன்.

''ரொம்ப மாறிட்டா... ஆனா இப்ப உங்க ரெண்டு பேரையும் பார்க்கறப்ப உங்க மேலே பழிபோட எனக்கு மனசு வரலே... ஆரம்பத்திலே உங்க பேர்ல எங்களுக்கெல்லாம் ரொம்ப கோபம்தான். ஆனா எப்படிப் பட்ட...'' சாரதா நாக்கைக் கடித்துக் கொண்டாள். மாயா எதிரிலேயே எப்படி அவளைப் பற்றிப் பேசுவது?

''மாமி ஏன் நிறுத்திட்டேள். பேசுங்கோ... என்னோட அந்து ஒரு மெண்டல்கேஸுக்குத் தாலி கட்டியிருக்கான். இது எனக்கே தெரியும்... பாவம் அந்து... என்னை வைச்சுண்டு கஷ்டப்படறான்... ஆனா என்னிக்காவது ஒரு நாள் நான் குணமடைஞ்சு என் அந்துவுக்கு நானே சமைச்சுப் போடுவேன்! ஏன் ஊட்டி விடவும் செய்வேன்!''

''ஏம்மா இப்படிப் பேசறே? உன்னைப் பார்த்தா யாரும் மெண்டல்கேஸ்னு சொல்ல மாட்டா.''

''சொல்றாளே... டாக்டர் சொன்னான். நர்ஸ் சொன்னா... என் டாடி சொன்னார், ராஜம்மா சொல்லலே... என்னோட அந்து சொல்லலே... இப்ப நீங்க சொல்லலே!''

மறுகணம் மாயா, ''ஹஹ்ஹா... ஹஹ்ஹா... ஹஹ்ஹா...'' என்று சிரிக்கலானாள்.

சாரதா வாயடைத்துப் போனாள்.

ஒரு குற்ற உணர்வு அவளைத் தாக்கியது. அவள் வாயை மூடிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அவளுக்கு என்ன பேசி எப்படிச் சமாளிப்பது என்று தெரியவில்லை.

இன்னும் எக்காளச் சிரிப்பை அடக்காத மாயாவை அப்படியே விட்டுவிட்டு அரவிந்தன் எழுந்து கை அலம்பினான்.

''நான் வரேம்ப்பா... என்னை மன்னிச்சுடு...'' என்று சொல்லி வெளியேறினாள் சாரதா.

* * * * * *

அரவிந்தன் சாரதாவை மறந்து மாயாவைப் பார்த்தான்.

அவளுடைய நடனம் முடிந்து விட்டது. தரையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். இருகைகளாலும் வாரி எடுத்து, அவளை அவனுடைய கட்டிலில் கிடத்தினான்.

மின் விசிறியைப் போடும் போது போன் அடித்தது.

எடுத்தான்.

மானேஜர் ஆராமுதன்.

''ஒரு குட் நியூஸ். ஒரு பேட் நியூஸ். குட், பேட் ரெண்டும் ஒரே நியூஸ்லே அடங்கியிருக்கு, அர்விந்த்.'' என்றார் ஆராமுதன்.

''சுத்திச் சுத்திச் சுத்தி ஓடணும்னு ஒண்டி ரேஸ் கோர்ஸ் இருக்கு, மிஸ்டர் ஆராமுதன்! என்ன விஷயம்? எதுக்கு போன் பண்ணினேள்!''

''என் பாஸ் வந்திருக்கார். ஐ மீன் யுவர் எஸ்ப் இன் லா...''

''என்ன?''

''உங்கிட்டே சொல்லக் கூடாதுன்னார். ஆனா என் மனசு கேக்கலே...''

''இதுக்குத்தான் போன் பண்ணினீரா..?''

''கொஞ்சம் இரு.... இது வரையில் குட் நியூஸ் சொன்னேன். பேட் என்னன்னு உனக்குத் தெரிஞ்சாத்தானே, நீ எச்சரிக்கையா இருக்கலாம்!''

''என்ன அது?''

''இரு சொல்றேன். ஜஸ்ட் ஹோல்டான்... இண்டர்காம்லே எவனோ கழுத்தை அறுக்கறான்... ப்ளீஸ் வெயிட் எ மினிட்...''

அரவிந்தன் பொறுமையாகக் காத்திருந்தான்.

தாரக்ராம் சென்னை வந்திருக்கிறாரா? எதற்கு?

மீண்டும் ஆராமுதன் பேச ஆரம்பித்தார்.

(தொடரும்)

> "இதுலே ஆயிரம் ரூபாயிருக்கு. என்னோட சின்னக் காணிக்கை. என்னோட மகனுக்குக் கணக்கிலே பாஸ் மார்க் போட்டுடுங்கண்ணா...!"

தயங்கியபடியே உள்ளே வந்த அந்த நபர், "வணக்கம் சார்..." என்றபடி இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு நின்றார்.

"வணக்கம்... வாங்க..." எதிரிலிருந்த நாற்காலியைச் சுட்டிக்காட்டி அவரை அமரச் சொன்ன பிள்ளை, சிவப்பு மைப்பேனாவை மூடி வைத்து விட்டு எதிரிலிருந்தவரை நிமிர்ந்து நோக்கினார்.

புதுநபர்மெல்லக்கனைத்துக்கொண்டார்.. "நா வந்து உங்க வகுப்புல படிக்கிறானே குணசீலன், அவனோட அப்பா... எம்பேரு நடராஜன்... ராஜாமில் ரோடுல 'ஆட்டோமொபைல்ஸ் ஸ்பேர் பார்ட்ஸ்' கடை வெச்சிருக்கேன்..." என்றார் அசட்டுச்சிரிப்புடன்..

'சரி' என்பது போலத் தலையாட்டிய சின்னச்சாமி, 'மேற்கொண்டு என்ன விசயம்' என்பது போல அவரைப் பார்த்தார்.

"என் மகன் குணசீலன்...அவனை நல்லாப் படிக்க வெக்கணும், பெரிய ஆளா ஆக்கணும்... இப்படி எல்லாம் எனக்கு ரொம்ப ஆசை... ஆனா அவனோ ஒம்பதாம் வகுப்பையே தாண்ட மாட்டேங்கறான்... எட்டாம் வகுப்பிலேயே ரெண்டு தடவை பெயிலாகி இப்போ ஒன்பதாம் வகுப்புக்கு வந்தான்... இந்த வருசமும், ஒன்பதாம் வகுப்புக் கணக்குப் பரீச்சை சரியா எழுதலியாம்..." என்று இழுத்தவர்... "நீங்க பாத்துக் கொஞ்சம் மனசு வெச்சா..." என்று மெல்ல நிறுத்தினார்.

"மனசுவெச்சா...?" சின்னச்சாமிபிள்ளையின் குரல் உணர்ச்சி எதுவுமின்றி வந்தது.

வந்தவர், தம் பையிலிருந்து இரண்டு ஆப்பிள் பழங்களையும், ஒரு சிறு காகித

# தெய்வம் ஒருநாள் வரும்...



உறையையும் எடுத்து, மேஜையின் மீது வைத்தார்…

"…இதுலே ஆயிரரூவா இருக்கு. என்னோட சின்னக் காணிக்கை… என்னோட மகனுக்குக் கணக்கிலே பாஸ் மார்க் போட்டுடுமுங்க…"

"மிஸ்டர் என்னை என்னன்னு நெனச்சீங்க?"

கண்கள் சிவக்க, படபடப்புடன் அவரைப் பார்த்துக் கத்தினார் சின்னச்சாமி பிள்ளை…

"சந்தைல மாடு வாங்கற மாதிரி என்னை விலைக்கு வாங்க வந்தீங்களா…?"

"நீங்க அப்படியெல்லாம் சொல்லக் கூடாது… கொஞ்சம் தயவு பண்ணணும்.." ஒருபடி தாழ்ந்தார் எதிரிலிருந்தவர்.

"இனி எதையும் பேச வேண்டாம்… அப்புறம் நா மனுசனா இருக்கமாட்டேன். முதல்ல இடத்தைக் காலி பண்ணுங்க…." கைவிரலை வாசலை நோக்கிக் காட்டியபடி எழுந்தார் பிள்ளை.

# கண்ணம்மா பிரியதர்சினி



எழுந்து போய் விட்டார்.

சற்று நேரம் மோட்டு வளையைப் பார்த்தபடியே வெறித்து உட்கார்ந்திருந்த பிள்ளை, மீண்டும் பேப்பரைத் திருத்த ஆரம்பித்தார்... இன்னும் கோபத்தில் அவருடைய உதடுகள் லேசாகத் துடித்தன..

இதுவரை சமையற்கட்டின் வாசலருகில் நின்று கொண்டு ஒன்றுவிடாமல் கேட்டுக் கொண்டிருந்த மரகதம், 'இன்று இரண்டிலொன்று பார்த்து விடுவது' என்பது போல அறைக்குள் நுழைந்தாள்.

"நேர்மை... நியாயம், இதையெல்லாம் கட்டியழுது இதுவரை என்னத்தைச் சாதிச்சீங்க...? என்னோட ஒடம்புல இருந்து நகை நட்டுங்கல்ல ஒவ்வொண்ணாக் கரைஞ்சது தாம் மிச்சம்... அவனவன் சின்ன வேலையில ஒட்டிக்கிட்டிருந்தாலும் எப்படியெப்படி வசதியா இருக்கான்? கல்யாணத்துக்குக் காத்து நிக்கற பொண்ணு... பிரசவத்துக்கு 'இன்னியோ நாளையோ'ன்னு இருக்கற மூத்த மக... காலேஜ் அட்மிஷனுக்கு அலையற பையன்... ஸ்கூல்ல ஒரு பையன்... இப்படி ஒரு பட்டாளமே உங்களை நம்பி இருக்கறது உங்களுக்கு ஞாபகம் இருக்கா இல்லையா?" பொரிந்தாள் மரகதம்.

"அடடடடா... உன்னோட வழக்கமான தொணதொணப்பை ஆரம்பிச்சுட்டியா மரகதம்...? கொஞ்ச நேரம் சும்மாயிரு பாப்போம்... எனக்குத் தலைக்கு மேல வேலையிருக்கு..."

"வகுப்பிலே பசங்களை அடக்கற மாதிரி இப்படி என்னோட வாயை அடக்கி அடக்கியே காலத்தைப் போக்கிட்டு வாங்க... நானும் இந்த வீட்லே அடியெடுத்து வெச்சு இன்னைக்கு இருவத்தாறு வருசமாச்சு... என்ன சொகத்தைக் கண்டேன்? என்னோட பேச்சு எப்ப இங்க செல்லுபடியாச்சு? எங்கப்பா பேசாம என்னை ஒரு ஊமையாவாச்சும் பெத்திருக்கலாம்... எல்லா எந்தலையெழுத்து...!"

...வாயை இடித்த வண்ணம், சமையற்கட்டினுள் நுழைந்து விட்டாள் மரகதம்... உள்ளே பாத்திரங்கள் உருண்டன...

'ஒரு டியூசன் சொல்லிக் கொடுத்தாலாவது... கொஞ்சம் அதிகப்படி வருமானம் வருமே...?' பலமுறை சொல்லியாயிற்று.

"இந்தா பாரு மரகதம்... நா வாங்கற சம்பளத்துக்கு மனசாற உழைக்கணும்... பள்ளிக்கூட நேரம் போக மீதி நேரத்துல பசங்களுக்கு, பணம் வாங்கிட்டு டியூசன் சொல்லித்தர்றது கூட தொழிலுக்குச் செய்யற துரோகந்தான். 'டியூசன் பீஸ்'ங்கற பேரில லஞ்சம் வாங்கறதுபோல?"

போலே, அவள் எதுவும் பேச முடியாமல் வாயை மூடிக் கொள்வாள். சின்னச்சாமி பிள்ளை பிழைக்கத் தெரியாதவர் என்று ஊரிலுள்ளவர்கள் பேசிக் கொள்வதும் உண்டு.

* * * * *

பகல் மணி இரண்டு இருக்கும்... சாப்பிட்டு முடித்து, சாய்வு நாற்காலியில் கண் மூடிச் சாய்ந்திருந்தார் பிள்ளை... காலையிலிருந்து ஓய்வின்றி விடைத்தாள்களைத் திருத்தியதால் லேசாக அசர்வாக இருந்தது...

அவசர அவசரமாக அருகில் ஓடி வந்தாள் மரகதம்...

"என்னங்க... உங்களைத்தானே...! சரசுக்கு வலி எடுத்திடுச்சுங்க... எனக்குக் கையும் ஓடல... காலும் ஓடல... போயி பக்கத்து ரோட்ல இருக்கிற டாக்டரம்மாவைக் கூட்டிட்டு வாங்க... சீக்கிரம்..." அவசரப்படுத்தினாள் மரகதம்... இதுக்குத்தான் நான் போனவாரமே சொன்னேன் ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணிடலாம்னு...' கேட்டீங்களா? தலைப் பிரசவம் வேற..."

சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டு புறப்பட்டவர் சற்றே தயங்கினார். புரிந்து கொண்ட மரகதம், "பணந்தானே? அதை அப்புறம் பார்க்கலாம்... முதல்ல டாக்டரைக் கூட்டிட்டு வாங்க..." என்று கூறி விட்டு மகளைக் கவனிக்கச் சென்றாள்.

சைக்கிளை எடுத்துக் கொண்டு விரைந்தவர், லேடி டாக்டருடன் திரும்பினார். வலி தாங்காமல் உள்ளே ஈனக் குரலில் அலறிக் கொண்டிருந்தாள் சரசு...

'மாதக்கடைசி... கையிலும் பணம் இல்லை. பிரசவச் செலவு ஐநூறு ஆயிரம் என்று ஆகுமே... என்ன செய்வது...?' கையைப் பிசைந்து கொண்டு நின்றார் பிள்ளை...

கழுவிய கையைத் துண்டினால் துடைத்துக் கொண்டு வெளியே வந்த லேடி டாக்டர்... "ஐ'ம் சாரி மிஸ்டர் பிள்ளை! கொஞ்சம் சீரியஸான கேஸ்... குழந்தை லேசாக் குறுக்கே விழுந்திருக்கும் போல இருக்கு... எடுக்க முடியலை... ஆயுதம் போடணும்... சமயத்தில 'சிசேரியன்' செய்ய வேண்டி வந்தாலும் வரும்... எதுக்கும் நீங்க உடனே நல்ல ஒரு ஹாஸ்பிடலுக்கு எடுத்துட்டுப் போங்க... எவ்வளவு தூரம் லேட்டாகுதோ அவ்வளவுக்கும் இரண்டு உயிருக்குமே ஆபத்து..." கைப்பெட்டியை எடுத்துக் கொண்டு போய் விட்டார் டாக்டரம்மா...

நல்லதொரு பிரசவ ஆஸ்பத்திரியில் இரண்டு மணி நேர மரணப் போராட்டத்துக்குப் பின்னர் பிள்ளை பிறந்தது. குழந்தையை உருவிப் போட்ட களைப்பில் கண் மூடி, கிழிந்த நாராய்ப் படுத்திருந்தாள் சரசு.

கண்களில் ஆனந்தம் ததும்பப் பேரனைப் பார்த்து மகிழ்ந்தனர் மரகதமும், பிள்ளையும். அடுத்த விநாடி பிள்ளையின் முகத்தில் மீண்டும் கவலை ரேகை படர்ந்தது.

லேசாக முகத்தைத் துடைத்தபடி வராண்டாவுக்கு நகர்ந்தார் பிள்ளை. பின் தொடர்ந்தாள் மரகதம்.

"மரகதம்...! இப்பப் பணத்துக்கு என்ன செய்யறது? டாக்டருக்கு முந்நூறு, நானூறு கொடுக்கணும். மருந்துச் செலவு, ரூம் வாடகை... எப்படியும் எண்ணூறு, தொளாயிரம் வரையில் கையைப் பிடிக்கும்" மனைவி

யின் முகத்தைப் பார்த்தவரின் கண்கள் கலங்கியிருந்தன ...

''நா ஒரு யோசனே சொல்றேன் ... கேட்பீங்களா ...பிறகு எங்கூட சண்டைக்கு வரக் கூடாது'' இழுத்தாள் மரகதம்.

''என்ன ...?''

''வந்து ... காலேயில வந்துட்டுப் போனுரே ஒருத்தரு... அவருட்ட போயி ...''

''மரகதம் ...! அந்த ஆளு என்னுடை நேர்மை யையும் தூய்மையையும் பணத்தாலே விலேக்கு வாங்கப் பார்க்கருன் ... நான் என்ன மத்த வங்களேப் போல ...'' பேச்சை முடிக்கவில்லே பிள்ளே ... அதற்குள் குறுக்கிட்டாள் மரகதம்.

''ஆமா ... இங்கே மகளும், பச்சை மண் ணும் சாகக் கெடக்குது ... நீங்க உங்க நேர்மை யையும், அதையும் இதையும் காப்பாத்திட்டு ராஜா மாதிரி உட்காந்திருங்க ... நாங்க எல் லோரும் எக்கேடோ கெட்டுத் தொலேய றோம் ... உங்க கண்ணியம், லட்சியம், வைத் தியக்காரத்தனம் எல்லாத்தையும் கட்டிக் கிட்டு நீங்களே அழுங்க ...'' என்று கூறி விட்டு மறுபக்கம் திரும்பிக் கொண்டாள் மரகதம். அவள் கண்களில் லேசான வழி சல்.

ஒருகணம் வெளியே வெறித்துப் பார்த் தார் பிள்ளே.

''சரி ... கொஞ்ச நேரம் பொறு ... பணத் தோட வர்றேன் ...'' மேல்துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வெளியில் நடந்தார் பிள்ளே.

* * * * *

இரண்டு மணி நேரம் கழித்து சைக்கிளில் வந்திறங்கினுர் சின்னச்சாமி பிள்ளே. நேரே மனேவியிடம் சென்றவர் ... ''இில ஆயிரத்து ஐநூறு ரூவா இருக்கு ... இந்தா செலவுக்கு வச்சிரு'' என்று கொடுத்தார்.

கணவனின் முகத்தைநிமிர்ந்துபார்த்தாள் மரகதம் ... ''அந்த ஆளுகிட்டதானே வாங் கினீங்க ... இத மொதல்லேயே செஞ்சிருந்தா?''

''என்னே மன்னிச்சுடு மரகதம் ... நீ நெனேக் கிறமாதிரி இல்லே ...'' என்றவர் அருகிலிருந்த சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்தார். ''என்னுடை வாழ்வே, தெய்வத்துக்கு நான் செய்யற வேள்வி மாதிரி. என் நேர்மை, தூய்மை, கண்ணியம், இலட்சியம் இதெல்லாந்தான் அந்த வேள்விக்கு நான் இடற ஆகுதிகள். இந்த வேள்வியை அழிக்க, வருகிற சோதனே கள்தான் நமக்கு வர்ற இந்தக் கஷ்டங்கள் லாம் ... இந்தச் சின்னச் சின்ன சோதனே களெல்லாம் என்னுடை வேள்வியை ஒண்ணும் செய்திட முடியாது ... என்னுடை வேள்வியை மதிச்சு தெய்வம் ஒரு நாள் வரத்தான் போகுது ...''

ஒன்றும் புரியாமல் அவருடைய முகத் தைப் பார்த்தாள் மரகதம்.

அவளே நிமிர்ந்து பார்த்தார் பிள்ளே.

''நம்மோட வீட்டை அடகு வெச்சிட் டேன்.''

# கே.பி. ஸூட்கேஸ் பரிசுத்திட்டம்

## பாக்கியராஜிடம் ஒரு கேள்வி



**போட்டி: 5.**

நடிகர், டைரக்டர், கதை வசன கர்த்தா என்று பல கோணங்களில் பாக்கியராஜைத் திரையில் பார்த்து ரசித்துள்ள நீங்கள் அவரிடம் கேட்கத் துடிக்கும் ஒரே ஒரு கேள்வியை மட்டும் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். பாக்கியராஜின் பதிலேப் பெற்று கல்கியில் பிரசுரமாகும் கேள்விகளுக்குப் பரிசு உண்டு. தவிர குலுக்கல் முறையில் ஒருவ ருக்கு விலேயுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறை யின்மேல் ''பாக்கியராஜின் பதிலுக்காக...'' என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 17.6.85.**

**48 விலேயுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ் கள் காத்திருக்கின்றன. அவற்றுள் ஒன் றைப் பரிசாகப் பெற்றுவிட வேண் டாமா? வாரம் தவருமல் போட்டிகளில் பங்கு பெறவும்.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

..............................

சென்னை

தேவிபாலா
அகஸ்தியா
பால அபிராமி

உதயம்
சந்திரன்
(பகல் காட்சி)

மற்றும் தமிழகமெங்கும்

தேவி பிலிம்ஸ் (பி) லிமிடெட்
அளிக்கும்...

தேவி ராயல் புரொடக்‌ஷன்ஸ்

# தென்றலே என்னைத் தொடு

ஸ்ரீதர்
அசோக்குமார்
இளையராஜா

லெனின்-கோபு-வாலி-வைரமுத்து-ரவி-

RAJATHI

## வாரம் ஒரு கடிதம்



# வெட்டி விட்டா வெரசா வளரும்!

தோளுரம் கொண்ட தோழனே!

நீ எப்போதாவது எதிர்ப்பைச் சந்தித்திருக்கிறாயா?

இல்லை. எப்போதுமே எதிர்ப்பைச் சந்தித்துக் கொண்டிருக்கிறாயா?

தளர்ந்து விடாதே!

எதிர்ப்பு என்பது தடைக்கல்லல்ல; படிக்கல்.

வழுவழுப்பான பாதை உனது வசத்துக்கு வராது.

உராய்வுகள் தேவை.

உராய்வுகள் — பாதத்திற்கு உதவிகள்.

ஆமாம் தோழனே!

எதிர்ப்புகள் — பிடிமானங்கள்.

எதிர்ப்பு என்பது உனது வேள்வியை அணைக்கும் மழையல்ல; நெய்.

எதிர்ப்பு என்பது உனது ரத்தத்தில் சுறுசுறுப்பு ஏற்றுகிறது; சூழ்நிலையைச் சுத்திகரிக்கிறது.

முன்னொரு நாள் வேப்ப மரங்களின் பக்கக் கிளைகளை என் தாத்தா வெட்டிக் கொண்டிருந்த போது 'ஏன் அதை வெட்டுகிறீர்கள்?' என்று வினவினேன்.

"வெட்டி விட்டாத்தானப்பா வெரசா வளரும்" என்று மோனையோடு எனக்கவர் ஞானப்பால் ஊட்டினார்.

எதிர்ப்பு எப்போதும் இரண்டு பாஷை பேசும். பெரும்பாலும் அழிவு மொழி பேசும்; எப்போதாவது ஆக்க மொழியும் பேசும்.

எனவே எல்லா எதிர்ப்புகளையும் லட்சியம் செய்யவும் கூடாது; சில எதிர்ப்புகளை அலட்சியம் செய்யவும் கூடாது.

இளைஞனே! வலிமையின் வாரிசே!

உனக்கு சுயமாகத் தொழில் தொடங்க வேண்டும் என்னும் வேட்கையிருக்கலாம்.

நிலாவைப் போல் இரவல் வெளிச்சத்தில் வாழ்பவனாக இல்லாமல், சூரியனைப் போல் சுயமாக ஒளிவிட வேண்டும் என்ற துடிப்பு உனக்குள் வெடித்து வரலாம்.

அப்போதுதான் உனது சொந்தமும், சுற்றமும் இப்போது பார்த்துக் கொண்டிருக்கும் முந்நூறு ரூபாய் வேலையை விட்டு விடாதே என்று வேண்டுகோள் விடுக்கும்; உன்னைப் பைத்தியக்காரன் என்று பரிகசிக்கும்.

அந்த எதிர்ப்புகளைக் கண்டு நீ இடிந்து விடாதே. உலகத்தின் ஒவ்வொரு மாற்றத்தையும் இப்படியொரு கூட்டம் எதிர்த்துதான் வந்திருக்கிறது.

அந்த அவநம்பிக்கையாளர்களை ஒதுங்கச் சொல்லி நீ உத்தரவு போடு.

பாவம் அவர்கள்!

கப்பலில் ஏறத் திராணியில்லாததால், கவிழ்ந்து போன கட்டுமரமே கடவுள் என்பவர்கள்.

இந்த சமூகத்தில் உழைப்புக்குத்தான் மரியாதையில்லையே தவிர உழைப்பவனுக்கு வாய்ப்பு இல்லாமலில்லை.

நம்மில் பலருக்கு முப்பது வயதிலேயே வாழ்க்கை. 'முடிந்துவிடுகிறது; முயற்சிகளுக்கு முற்றுப் புள்ளி வைத்து விடுகிறார்கள்.

அதனால்தான் இங்கே நூற்றாண்டுகள் மட்டுமே முன்னேறிக் கொண்டிருக்கின்றன. மனிதன் காலத்திற்குக் காலண்டர் கிழிப்பவனாகவே காலம் கழிக்கிறான்.

சில தற்காலிக சுகங்களுக்காக நிரந்தர லட்சியங்களை ஒத்திப்போடுவது உதவாது.

இறைச்சித் துண்டுகளுக்கு உத்தரவாதம் உண்டு என்பதற்காக சிறுத்தைக் கூண்டுக்குள் குடியிருக்கச் சம்மதம் தருவது போன்றது அது.

எனவே, இளைஞனே! முடிவெடுப்பதற்கு முன்னால் யோசி; முடிவெடுத்தபின் யோசிக்காதே.

யோசிக்காமல் முடிவெடுப்பவன் பேதை; முடிவெடுத்தபின் யோசிப்பவன் கோழை;

உனக்கு முழு நம்பிக்கை வந்து விட்டது என்றால், முன் வைத்த காலை நீ பின் வைக்காதே!

புகைப்படம்: யோகா

**கவிஞர் வைரமுத்து**

# சிறையில் பிறந்த நாள் கொண்டாடும் கலைஞர் பற்றி..?

! மக்கள் ஏமாந்தது போதும் என்று உணர்ந்து வருகிறார்கள்; உழைக்காமல் சம்பாதிப்பது நிலைக்காது என்று புரிந்து கொண்டு வருகிறார்கள் — மகிழ்ச்சி. ஒரேயடியாக சைபருக்குச் சரியும் நாள் வர வேண்டும் — எதிர்பார்ப்பு.

* எஸ். ரவி, கும்பகோணம்.
? இருமொழிக் கொள்கையை நாடு முழுவதும் அமல்படுத்த வேண்டும் என்ற அரங்கநாயகத்தின் கூற்றை ஆதரிக்கிறீர்களா?

! தேசத்தின் ஒருமைப்பாட்டுக்கும், துரித முன்னேற்றத்துக்கும் அது ஒன்றே வழி.

* ராகவன், காணுடுகாத்தான்.
? ஒரே விழாவில் மூன்று நான்கு அமைச்சர்கள் கலந்து கொள்வது சரியா?

* ராதாப் பிரியன், அருர்.
? சுரேஷ் — அனிதா திருமணம் பற்றி...?

! தந்தி பேப்பருக்குத் தலைப்புச் செய்தி.

* வி. அன்பழகன், சென்னை—32.
? தமிழ்நாட்டில் ஃபைல்கள் ஆமை வேகத்தில் நகருதாமே?

! விசாரித்தேன், ஆமை ஓட்டிலிருந்து தலையை மெல்ல வெளியே நீட்டி, 'என்ன நைனா நம்மளை இப்படி இன்ஸல்ட் பண்றியே' என்று கேட்கிறது!

* ச. சி. நாகராஜன், சென்னை.
? இரு கழகங்களின் ஆட்சிக்கு வித்திட்ட ராஜாஜியை தீர்க்கதரிசி என்று எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

! அண்ணா அகால மரணமடையாதிருந்திருந்தால் இந்தக் கேள்விக்கு இடமிராது. அண்ணாவின் மரணம் ராஜாஜியின் தீர்க்க தரிசனத்தினால் கணிக்கப்பட முடியாத ஒன்று. அமெரிக்காவிலிருந்து அண்ணா ராஜாஜிக்கு எழுதிய கடிதங்கள் ராஜாஜியின் சீரிய சிந்தனைக்கும் சரியான கணிப்புக்கும் சான்று.



* பிறந்தநாள்.



* அகால மரணம்.

! அமைச்சர்களின் நேரம் மக்கள் பணியில் செலவாக வேண்டியது. ஒரு விழாவில் முதல்வர் சார்பில், அரசு சார்பில் ஒரு அமைச்சர் கலந்து கொண்டால் போதுமானது. நாலு பேர் ஐந்து பேர் பங்கேற்பது வீண் கால விரயம். மக்களுக்கு இழைக்கப்படும் துரோகம். ஆனால் நம் அமைச்சர்கள் தங்களுக்கு வேலையே இல்லை போல நடந்து கொள்கிறார்கள். ஒரு வேளை உண்மை அது தானோ என்னவோ!

* பி. எல். பரமசிவம், மதுரை.
? ராஜீவ் காந்தியைச் சந்திக்க நேர்ந்தால் அவர்முன் என்ன பிரச்னையை வைப்பீர்கள்?

! அடக் கடவுளே! அவருக்கு இருக்கிற பிரச்னைகள் போதாதா? நான் வேறு பிரச்னைகளைச் சுமத்த வேண்டுமா?

* ஆர். வசந்தகுமார், கும்பகோணம்.
? சென்ற ஆண்டில் 250 கோடிக்கு விற்பனை ஆன லாட்டரிசீட்டு விற்பனை தற்போது 40 கோடியாகச் சரிந்து விட்டது பற்றி...?

* எஸ். பரமசிவம், சீர்காழி. *
? தமிழக இளைஞர்கள் கொதித்தெழுந்தால் இங்குள்ள தொலைக்காட்சி நிலையங்களைத் தகர்த்தெறியத் தயங்க மாட்டார்கள் என்று அமைச்சர் காளிமுத்து ஆவேசமாகப் பேசியது...?

! பொறுப்பற்ற பேச்சு என்பது ஒரு பக்கம். பேச்சோடு சரி என்பது இன்னொரு பக்கம். பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன் என்கிற கதை.

*** எஸ். சம்பத்குமார், சென்னை—93.**
**? பிராமணர்களை இழிவுபடுத்தும் திகவை ஏன் தடை செய்யக் கூடாது?**

! அப்படியானால் முஸ்லிம்களையும், கிறிஸ்துவர்களையும் தாக்கும் இந்து முன்னணி, ஆர். எஸ். எஸ்., போன்றவற்றையும் தடை செய்ய வேண்டியிருக்குமே சம்மதமா?

குறை கூறும் போதும் அவர்கள் பக்கத்திலேதான் இருக்கிறோம். சந்தேகமே வேண்டாம்.

*** க. ஆறுமுகம், திருவண்ணாமலை.**
**? பிறந்த நாளைச் சிறையில் கொண்டாட விருக்கும் கலைஞரைப் பற்றி...?**

! எங்கு கொண்டாடினாலும் அவருக்கு அது பெருமை சேர்க்கும். சிறையில் கூடுதல் பெருமை — பப்ளிசிடி. ஈழத்தமிழருக்காக நடக்கும் போராட்டம். இதற்குப் போய் அதிக நாள் சிறையில் வைத்திருக்க வேண்டுமா? விடுவித்து விட்டிருக்கலாம். ஜெயில்களில் நெரிசலைத் தவிர்த்து மோதல்களுக்கு இடமின்றி செய்திருக்கலாம்... லாம்... லாம்... இன்னும் பல... லாம். எது எப்படியோ, தொண்டர்கள் தீக்குளிக்காமல் இருப்பதே தலைவர்களுக்கு அவர்கள் தரக் கூடிய மிகப் பெரிய (பிறந்த நாள்) பரிசு.



* என்ன பிரச்னை?



* திருமணம்...



* ஆவேசம்.



* ஒன்றே வழி.

*** ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்.**
**? ராஜீவ் காந்தியின் பலம், பலவீனம் எது?**

! பலவீனம்: இந்திராஜி பலம்: ராஜீவ்ஜி. பலமும் இந்திராஜியாகவே இருந்த காலம் ஒன்றுண்டு — தேர்தலுக்கு முன். இன்று அவர் சுயம்பிரகாசர்.

*** காமேசுவரன், சென்னை—4.**
**? வித்வான் லக்ஷ்மணன் விழாவில் '''கல்கி' எப்போதும் நம் பக்கம்'' என்று சொன்னாரே அமைச்சர் வீரப்பன், காதில் வாங்கிக் கொண்டீரா?**

! ஓ யெஸ்! பொறுப்புள்ள ஒரு பத்திரிகை எப்போதும் ஆட்சியாளர் பக்கத்திலேயேதான் இருக்க வேண்டும். சந்தேகமென்ன? அருகிலேயே இருந்து, உன்னி நோக்கி, நல்லது கெட்டதை எடுத்துச் சொல்ல வேண்டும். அதுதான் பத்திரிகை தர்மம். ஆட்சியைக்

*** ஆர். எஸ். ராஜ், சீர்காழி.**
**? ஜலதோஷத்துக்கு எளிய மருத்துவம் என்ன?**

! அனுபவிப்பது.

*** ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**எஸ். பரமசிவம்,**
**6—A, சாமிநாதனார் தெரு,**
**சீர்காழி—609 110.**

# நீங்கள் கேட்டவை — தராசு



* ரூபாய் 20—க்கு மேலிருந்தால் நாம் 20 பைசா ரெவினியூ ஸ்டாம்ப் ஒட்டிக் கையெழுத்துப் போட்டு ரசீது தர அல்லது பெற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலிருந்தே இம்முறை இருக்கிறது. ரூபாயின் மதிப்பு ரொம்பக் குறைந்து விட்டதால் இனி ரூ. 20 என்ற அளவை மாற்றி ரூ. 100—க்கு மேல் உள்ளவற்றிற்கு மட்டும் ஸ்டாம்ப் ஒட்டிக் கையெழுத்துப் போட்டு ரசீது தர அல்லது பெற்றுக் கொள்ள வேண்டும் என்று ஏற்படுத்துதல் நலம்.

கோவில்பட்டி. டி. மனோகரன்.

* ஷாக் அளிக்கும் மின்வாரிய விவகாரங்கள் என்ற தலைப்பில் "மின் வாரியத்தின் ஊழல் மற்றும் நிர்வாகத் திறமையின்மையினையும் புட்டு, புட்டு வைத்திருந்தார்கள்.

நிலக்கரியை எப்படி கொண்டு வருவது? பழுதடைந்த மின் சாதனங்களை உடன் எப்படி பழுது பார்ப்பது? மின் இழப்பு மற்றும் மின் திருட்டை எப்படித் தடுப்பது?

போன்றவற்றில் தனது கவனத்தை ஒருவேளை செலுத்தியிருந்தால் மின்வெட்டைத் தடுத்திருக்கலாமோ என நினைக்கத் தோன்றுகிறது.

உடுமலைப்பேட்டை. க. இரா. கோபால்.

* "பிள்ளையார் பிடிக்கக் குரங்கான" கதையாகத் தனது பிள்ளைகளை நல்ல முறையில் வளர்க்க வேண்டும் என எண்ணித் தனது கட்டுப்பாட்டு அறைக்குள் வளர்த்து, "ஊற்றுத் தவளையாக" மாற்றிவிடும் பெற்றோர்களுக்கு கவிஞர் திரு. வைரமுத்து தந்து உள்ள கருத்துக்கள் வைராக்கியமான டானிக்!

கடம்பூர். *சு. கணபதி.

* இயற்கையிலேயே நகைச்சுவை உணர்வு கொண்ட கல்கிக்கே ஜோமாஸ் க ந்தனைக் கவர்ந்தது என்றால் எங்களின் எண்ணத்தைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

லால்குடி. திருமதி கே. கஜலட்சுமி ராஜேந்திரன்.

* "நம்பூதிரிபாடு சொல்வதிலும் நியாயம் இருக்கத்தானே செய்கிறது! அல்லல்படும் இலங்கைத் தமிழர் தம் துயர் துடைக்க ஆவன செய்ய முன்வர வேண்டும். தமிழகத்தில், ஏன், இந்திய நாட்டில் வாழும் கோடானு கோடி மக்களின் கோரிக்கையும் இதுவே."

திருச்சி. ஆர். அப்துல்சலாம்.

* சமுதாயப் பணியின் மூலம் பலருடைய குறைகளை நிவர்த்தி செய்து வாழ்க்கையில் பலரைத் தன்னம்பிக்கையுடன் வாழ வழி செய்து வரும் திரு. விஜய் மர்ச்சண்ட் அவர்களின் நற்பணி தொடரட்டும்.

சென்னை—5. வி. கே. சுப்பிரமணியன்.

* ஜோதிடருக்கே ஜோஸ்யம் சொன்ன "கல்கி" அவர்களின் கூற்றை நிலைநிறுத்தி, ராமனுக்கேற்ற லக்ஷ்மணனாக விளங்கும் திரு. வித்வான் வே. லக்ஷ்மணன் அவர்களை, நாங்களும் வாழ்த்துகிறோம்.

திருச்சி—17. எஸ். கே. பாரி.

* பிரச்னை தீர்ந்தது — வாசகர்களின் அனுபவங்கள் ஒவ்வொன்றும் நல்ல படிப்பினையைத் தருவதாக அமைந்தது.

கோவை. ரம்யா.

* 19.5.85 இதழில் மாணவர் பக்கங்களில் வெளியான துணுக்குகள் அனைத்தும் மணிமணியாக இருந்தது.

ஈரோடு—10. மேஜர்தாசன்.

* ஆஸ்திக சமாஜத்தில் கேட்டு, தொகுக்கப்பட்ட அத்தனை சொற்பொழிவுகளும் அருமை; அற்புதம்.

மதுரை. தேவநாதன்.

* 14.5.85 அன்று கோவை ரயில் நிலையத்தில் கண்ட காட்சி: கோவை எக்ஸ்பிரஸ்ஸில் சென்னையிலிருந்து கோவைக்கு, மாவட்ட அ. இ. அ. தி. மு. க. தலைவர் வந்தார். அதற்காக ஸ்டேஷனில் பிற்பகல் 1 மணி முதல் ரயில் வந்த நேரமான 2.10 வரை கோவை மாவட்டத்திற்கே உரித்தான 25 பேர்கள் கொண்ட



வட்ட மேஜை

"சிக்காட்டம்" என்ற வாத்தியக் குழு முழங்கியது. மொத்தம் அதுபோன்று மூன்று குழுக்கள் தங்கள் இசைக் கருவிகளை உச்சஸ்தாயியில் முழங்கினர். நடு நடுவே சீட்டி ஒலி வேறு. பிளாட்பாரத்தில் நிற்க முடியாத அளவிற்கு சப்தம், கூட்டம். இதை ரசித்தவர்கள் சிலர், முகம் சுளித்தவர்கள் பலர். தலைவரை வரவேற்க வந்தவர்கள் யாரும் பிளாட்பாரம் டிக்கட் வாங்கினார்களா என்றால் இல்லை. இதற்கு இரு தினங்கள் முன்பு திருப்பூர் மணிமாறன் வந்த போதும் இதுபோன்ற ஆர்ப்பாட்டந்தான். இப்படி அடிக்கடி நடக்கிறது என்று அங்கிருந்த ஒரு வியாபாரி அலுத்துக் கொண்டே என்னிடம் சொன்னார். ஏகப்பட்ட போலீஸ் பந்தோபஸ்து. இடித்துத் தள்ளல் வேறு. ஸ்டேஷன் அதிகாரிகள் எப்படி அனுமதிக்கிறார்கள்? அவர்களது வேலைக்கும், பிரயாணிகளுக்கும் தாங்கொணாத தொந்தரவு. இம்மாதிரி வரவேற்பு தேவை தானா?

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது.)

சென்னை—5. வி. வெங்கட்ராமன்.

# வேதனைதரும் வரவேற்புகள்!



# சுகமான ராகங்கள்

கண்ணாடி ஜீவிதா. அடையாளமே தெரியாமல் உரு மாறி ஒரு சாந்தமான பாவனையுடன் காணப்படும் வித்தியாச ஜீவிதா.

சிவகுமார் போலீஸ் இன்ஸ்பெக்டர். அவர் மீது அபாண்டமாகக் கற்பழிப்புக் குற்றம் சுமத்தி ஜெயிலுக்கு அனுப்பும் ரவிச்சந்திரன். (ஆமாங்க, பழைய ரவிச்சந்திரன் தான். ஆள் இன்றைக்கும் என்ன ட்ரிம்மாய் இருக்கிறார் தெரியுமா?) கணவன் ஜெயிலுக்குப் போனதால் இறந்து போகும் மனைவி; பைத்தியமாகி அலையும் சிவகுமாரின் மாமனார் என்று ஏகப்பட்ட டாலடிக்கும் முத்துக்களைக் கோர்த்துக் கொண்ட அட்டகாசமான மாலை, பாதிக் கதை! அப்புறம் பாருங்கள்— இந்த சிவகுமார், பழி வாங்குகிறேன் பேர்வழி என்று ஜெயிலுக்குப் போகாமலேயே விலங்குடன் தப்பித்து சர்வர் வேஷம் போட்டு, ஷூ பாலீஷ்காரன் வேஷம் போட்டு, கழைக் கூத்தாடி வேஷம் போட்டு, அந்த வேஷம் போட்டு, இந்த வேஷம் போட்டு... 'போதுமடா சாமி' என்று சொல்ல வைத்து விடுகிறார்கள்.

அது அப்படி இருக்க...

மறுபடியும் சரிதா பிய்த்து உதறுகிறார். இதில் பட்டிக்காட்டுப் புடவை சுற்றிய பாத்திரம்.

புதுசாய் வாங்கிய வாட்சை வாட்சை நீட்டுவதும், ஃபோனைத் தொடாமலேயே 'அவர் ஊட்ல இல்லீங்கோ' என்று ஃபோனுக்கு பதில் சொல்வதுமாய் சிரிக்க வைத்து, ஜமாய்த்திருக்கிறார்.

இன்ஸ்பெக்டரை அடித்து நொறுக்கும் இடத்தில் சிவகுமார் ஜொலிக்கிறார்.

இந்த முறை இசை எம். எஸ். வி. ஒரு பாட்டு நன்றாக உள்ளது. சரிதா மழையில் நனைந்து கொண்டே (கூட ஆடும் அத்தனை பெண்களும் சரிதா சைஸுக்கு இருக்கிறாற்போல் பார்த்துக் கொண்டிருக்கிறார் டைரக்டர்:) ஆடிப் பாடும் பாட்டு பரவாயில்லை.

முதல் பாதி சந்தனக் குழம்பு. மறு பாதி சாக்கடைச் சேறு.

# இணைந்த கோடுகள்!

இருவர் காதலிக்கிறார்கள். கூடுகிறார்கள். பிரிகிறார்கள். கரு வளர்கிறது. காதலி கஷ்டப்படுகிறாள். கடைசியில் பிரிந்தவர்கள் இணைகிறார்கள் — கதை. மற்றும்...!

அந்த கஞ்சாவாலா ஒரு பக்கம், அந்த சிகரெட் வாலா ஒரு பக்கம் — இருவருமாய் மாறி மாறி ஆளுக்கு ஆள் புகை விடுகிறார்கள். 'கதையை நகர்த்துங்கப்பா' என்று கத்தலாம் போல் இருக்கிறது.

ஹீரோ மிஸ்டர் மது (நிஜப் பெயர் என்ன?)விற்கு கொழுக், மொழுக் என்று அமுல் பேபி மாதிரி ஒரு முகம், பால் வடிகிறது. மற்றபடி அவர் ஒரு செதுக்கி வைத்த சிலை. அழுவதானாலும், சிரிப்பதானாலும் ஒரே முகம்.

ஹீரோயின் சூர்யாவாம்! ஹீரோ வசனம் பேசுகையில் ஒரு இடத்தில் 'நீ ஔவையார் மாதிரி இருக்கே' என்கிறார்.. நூறு சதம் பொருந்தும். அவருடைய முக வெட்டிற்கு அப்புசாமியின் மிஸஸ் சீதாப் பாட்டி வேஷம் அட்டகாசமாய் அமையும்.

சின்னி நடுரோட்டில் நீச்சல் அடிக்கிற ஸீன் பரவா(இ)ல்லை. லேசாக சிரிப்பு வருகிறது.

மக்களைக் கவர வேண்டும் என்பதற்காக நீச்சல் உடையில் ஒரு நடிகை, நனைந்த புட்வையுடன் நாயகி. போதும் போதாததற்கு ஜெயமாலினி!

என்னவோ கதை, என்னவோ பாட்டு, என்னவோ நடிப்பு.

ஃபிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர்களுக்கு, எப்படியெல்லாம் படம் எடுக்கக் கூடாது என்பதை எடுத்துக் காட்ட இந்தப் படத்தைப் பண்ணச் சொல்லியிருந்தார்களோ என்னவோ.

டைரக்டர் வெகு சிரத்தையாகப் பண்ணியிருக்கிறார்.

**—ஜெயமன்மதன்**







• Arthritis வியாதியால் அவதியுறும் என் தாயாரும், B. P. வந்து கஷ்டப்படும் நானும் இந்த விடுமுறையில் எங்கும் போக முடியாமல் தவிக்கும் போது, இருக்கும் இடத்திலிருந்தே பல முக்கியமான இடங்களைப் பார்க்கும் சந்தர்ப்பமளித்த விடுமுறை மலரை எப்படிப் பாராட்டுவது என்று எனக்கே தெரியவில்லை.

பாண்டிச்சேரி, புதுவை. சதாது.

• பல துறைகளிலும் உள்ளவர்களின் வண்ணப்படங்களும், அருமையான பிறமொழிக் கதைகளும், நகரங்களை நிலைக்களனாகக் கொண்ட சிறுகதைகளும், நகைச்சுவைத் துணுக்குகளும், கட்டுரைகளும், கோடை வாசஸ்தலங்களைப்பற்றியபுகைப்படங்களும்கொடுத்த பத்துருபாயைப் பற்றிய சிந்தனையே இல்லாமல் செய்துவிட்டது.

கிருஷ்ணகிரி—1. ஆர். பூபாலன்.

• கல்கி விடுமுறை மலரைப் புதுமைப் பொலிவுடன் பக்கத்திற்குப் பக்கம் சிரிக்கவும், சிந்திக்கவும் கண்ணுக்கு விருந்தாகவும் படைத்த கல்கிக்கு எனது பாராட்டுக்கள்.

கிருஷ்ணகிரி—2. எம். பீட்டர்.

• இவ்வாண்டு விடுமுறை மலர் கோடையின் கடுமையை விரட்டி விட்டுவிட்டது! கிரிக்கெட் ஸ்ரீகாந்தின் வண்ணப் படத்திற்கு கிரிக்கெட் ரசிகர்கள் சார்பில் பிடியுங்கள் பாராட்டை!

குடியாத்தம் (வ. ஆ.) ஆர். அரிகோபி.

• தெற்கே இருந்தபடியே வடக்கேயுள்ள மதுராவைக் கண்டு களிக்கச் செய்திட்ட வண்ணப் புகைப் படங்கள்.

ஹீரோக்களான தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். ராஜீவ்காந்தி, ஸ்ரீகாந்த், தி(ஷோ)பா இவர்களின் வண்ணப்படங்கள்.

பாரதியின் புகழ் பரப்பும் ம. செ. வின் வர்ண ஓவியங்கள், எங்கள் உள்ளம் கவரும் மதுரையின் முக்கிய வண்ணப் புகைப்படங்கள், நளினி, ரஜினி, ஜேசுதாஸ் — திரை நட்சத்திரங்களின் வண்ண போட்டோக்கள் அத்தனையும் கண்களுக்கு குளுமை!

அமரர் கல்கியின் சௌந்தர்ய நகரத்தில் இப்படி குஷியாக வலம் வருவோம்னு நினைக்கவே இல்லே.

மொத்தத்தில் இவ்வருட விடுமுறை மலரை கையில் பிடித்த போதெல்லாம் ஜிலு ஜிலு ஏசி ரூமில் இருக்கிற மாதிரியே ஒரு பிரமிப்பை உண்டு பண்ணிவிட்டது!

சுப்பிரமணியபுரம், திருமதி. சுசுந்தி நாராயண்.

## அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி, கும்பகோணம்

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் **கும்பகோணம் "ராஜா வேத காவ்ய பாடசாலை"**யை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் ரூ. 200/– ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/– மூலதனம் ஏற்படுத்தியோ (Or) அவ்வப் போது ரூ. 200/– அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் ஸமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80G விதியின் படி வருமானவரி விலக்கு உண்டு.

எமது பிரசுரங்களின் வருவாய் பூராவும் மேற்படி பாடசாலையின் அபிவிருத்திக்கு மாத்திரமே உபயோகப்படுத்தப்படுகிறது.

## எமது பிரசுரங்கள்

1. ரிக்வேத ஸம்ஹிதா – (10 மண்டலங்கள்) நாகர அக்ஷரம்
   விலை ரூ. 150/– + ரூ. 10/– தபால் செலவு — ஆக ரூ. 160/–

2. ஸாம வேத அஷ்டப்ராம்மணம் – (3 பாகங்கள்) நாகர அக்ஷரம் ஸாம வேத சிக்ஷகள் திருவிசநல்லூர் மஹா மஹோ உபாத்யாய ஸ்ரீ ராமசுப்பா சாஸ்திரிகள், மன்னார்குடி மஹா மஹோ உபாத்யாய ஸ்ரீ ராஜு சாஸ்திரிகள் இவர்களால் இயற்றப்பட்ட ஸாமவேத ஸ்வர விமர்சனம், ஸாமவேத உத்கர்ஷ மஞ்சரி இவைகளுடன் கூடியது. சுமார் 1500 பக்கங்கள் கொண்டது
   விலை ரூ. 200/– + 10/– தபால் செலவு — ஆக ரூ. 210/–

3. ஆபஸ்தம்ப பூர்வ அபர ப்ரயோகம் – (கிரந்த அக்ஷரம்)
   விலை ரூ. 60/– + தபால் செலவு ரூ. 5/– ஆக ரூ. 65/–

## இதர பிரசுரங்கள்

4. ஸ்ரீமத் ராமாயணம் – (8 பாகங்கள்) நாகர அக்ஷரம்
   தமிழ் பத பதார்த்தத்தோடு – அயோத்யா காண்டம் முதல் பாகம் நீங்கலாக
   விலை ரூ. 150 + ரூ. 25 தபால் செலவு — ஆக ரூ. 175/–

N.B:– இதை லாரி மூலம் அனுப்பினால் செலவு குறையும்.

5. மேற்படி ஸுந்தர காண்டம் மட்டும் – 1 பாகம்
   விலை ரூ. 50 + ரூ. 5 தபால் செலவு — ஆக ரூ. 55/–

6. ஸ்ரீமத் ராமாயணம் – தமிழ் மொழி பெயர்ப்பு (5 Volume கொண்டது)
   விலை ரூ. 100 + தபால் செலவு ரூ. 15 —ஆக ரூ. 115/–

விபரங்களுக்கு:— மஹாராஜ ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி, கும்பகோணம்.

N.B: உபநயனமான 9 வயதுக்குட்பட்ட ரிக், ஸாம வேத மாணவர்களைச் சேர்த்துக்கொண்டு அவர்களுக்கு ஆகாரம், இருப்பிடம் முதலிய சகல சௌகர்யங்களும் செய்து கொடுத்து வித்யாப்யாஸம் செய்து வைக்கப்படும். இதற்கான விபரங்களுக்கு 1ரூ. தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விண்ணப்பிக்கவும். விண்ணப்பங்களை ஜூன் 15ம் தேதிக்குள் அனுப்பி வைக்கக் கோருகிறோம்.

விண்ணப்பங்கள் அனுப்ப வேண்டிய விலாசம்:—

சேர்மன்,

ராஜா வேத காவ்ய பாடசாலை, கும்பகோணம்.



• “அதுவும் இருமுகக் கதாபாத்திரம்தான்” •

கேள்வி (61): இதுவரை உங்கள் படங்களில் அதிக நாள் ஓடி அதிக வசூல் தந்தது எது? (எஸ். ராஜேஸ்வரி, மதுரை).

கே. பாலசந்தர்: அது ஒரு தெலுங்குப் படம். மரோ சரித்ரா. பெங்களூரில் இரண்டரை வருடங்கள் ஓடியது. சென்னையில் ஒரே ஒரு தியேட்டரில் பகல் காட்சியாக 500 நாட்கள் ஓடியது. இதன் இந்திப் பதிப்பு 50 வாரங்களுக்கு மேல் ஓடியிருக்கிறது.

கேள்வி (62): சமூகப் பிரச்னைகளை நன்கு அலசுகிற நீங்கள் அதன் முடிவுகளை தர இயலாதது ஏன்? இயலாமையா? முயற்சியின்மையா? பயமா? (மேகலா ரமேஷ், மைலாப்பூர்)

கே. பாலசந்தர்: பிரச்னைகளை அலசி, அப்படிப்பட்ட விஷயங்களில் மக்களுடைய எழுச்சியையும், அவேர்னஸ்ஸையும் உண்டாக்குவதுதான் படமெடுப்பவரின் பணி. இருந்தாலும் எல்லாப் படங்களிலும் சில தீர்மானங்களும், தீர்வுகளும் நேரடியாய் இல்லாமல், சுற்றி வளைத்துக் கூடக் காணப்படலாம். எங்காவது தொக்கி நிற்கலாம். ஆனால் சில முக்கியமான, பூதாகரமான பிரச்னைகளுக்குத் தீர்வுகள் தர சினிமாக்காரனால் இயலாது. அவை நமது வேலையும் அல்ல. தீர்வு காண வேண்டியது பொறுப்பில் உள்ளவர்களின் கடமை. உதாரணமாக, அக்சமீஸ்லேயில் சுட்டிக்காட்டிய கட்சித் தாவல் லீலைகளை ஓரளவுக்காவது குறைப்பது போல் இப்போது கட்சித் தாவல் சட்டம் வந்திருக்கிறதே!

கேள்வி (63): ஆணாயிருந்தும், பெண்களின் உணர்ச்சிகளை மிக இயல்பாய்ச் சித்தரிக்க உங்களால் முடிவது எப்படி? (திருமதி ராஜலக்ஷ்மி, சென்னை—92).

கே. பாலசந்தர்: தேங்க் யூ ஃபார் தி காம்ப்ளிமெண்ட்ஸ் மேடம்! ஒருவேளை இப்படி இருக்கலாமோ? குறிப்பிட்ட சம்பவங்களில் ஆண்களின் உணர்ச்சிகள் எப்படி இருக்கும், அவர்கள் எப்படி ரியாக்ட் பண்ணுவார்கள்னு அலசிப் பார்க்கிறேன். அவற்றை அப்படியே நேர் எதிரிடையாகச் சிந்தித்துப் பார்க்கும் போது, பெண்களின் உணர்வுகளை மிக இயல்பாகச் சித்தரிக்க இயலுகிறதோ என்னவோ!

கேள்வி (64): வெற்றியின் உச்சியிலிருந்து திடீரென கீழே விழுந்துவிட்டால், எப்படி மன நிலையைச் சீர் செய்து கொள்வீர்கள்? (திருமதி விஜயா, சென்னை—59).

கே. பாலசந்தர்: முதல்லே அடிபட்ட காயத்தை ஆற்றிக் கொள்ளுவேன்; அப்புறம் தள்ளிவிட்டது யார்னு மேலே பார்ப்பேன்; அவர்கள் கீழே விழும்வரை காத்திருந்து, மீண்டும் படியேறி மேலே போவேன்.

கேள்வி (65): நீங்கள் பெரும்பாலும் பிராமண சமூகத்தினைத் தாழ்த்தியே எழுதுவதேன்? (சுப்ரமணியன், திருச்சி).

கே. பாலசந்தர்: இது மிகவும் பொதுப்படையான ஒரு குற்றச்சாட்டு. இதற்கு ஆதாரமே இல்லை. மிஞ்சி மிஞ்சிச் சொன்னால், அரங்கேற்றம் என்பீர்கள். அதற்குப் பிறகு என்ன உதாரணம்? விரலை விடுங்களேன் பார்ப்போம்!

**கே. பாலசந்தர்**

# கட்சித்தாவல் சட்டம் வந்திருக்கிறதே!

**கேள்வி (66):** நீங்கள் ஏன் சில்க், அனுராதா டான்ஸையே சேர்ப்பதில்லை? (ராஜன், சென்னை—14).

கே. பாலசந்தர்: அதுல ஒரு விஷயம் இருக்கு சார்! அதாவது அவர்கள் ஆடும் டான்ஸ்களை மற்ற படங்களில் பார்த்து நான் ரசித்துக் கொள்கிறேன். என் படங்களில் அவர்களைப் பார்க்க நான் விடுவதில்லை. ஒரு மாதிரி சுயநலம்தான் இதுவும்!

**கேள்வி (67):** பலரை சினிமாவில் அறிமுகப்படுத்திய நீங்கள் உங்கள் மகனையோ, மகளையோ, ஏன் சினிமாவில் ஈடுபடுத்தவில்லை? (சீதாலக்ஷ்மி, கொளத்தூர், சென்னை—99).

கே. பாலசந்தர்: இங்கு இருக்கும் வரை என் மூத்த மகன் கைலாஷ் என் படங்களில் பாதிக்கு மேல் பார்த்ததே இல்லை என்று சொல்லலாம். ஆனா இப்போ அமெரிக்கா போய் சினிமடோகிராஃபி படிக்கிறான். அப்பாவோட அருமை இங்க இருக்கிற வரை அவனுக்குத் தெரியலையோ என்னவோ? என் மகள் புஷ்பா படங்களை விவாதிப்பதோடு சரி! கடைசிப் பையன் பிரசன்னா. அவனுக்குப் பிரச்னைப் படங்கள் எல்லாம் வேண்டாம். பொய்க்கால் குதிரை மாதிரி சிரிப்புப் படமே போதும்.

**கேள்வி (68):** ரஜினியை அரசியலில் ஈடுபடும்படி அறிவுரை சொன்ன நீங்கள் முதலில் அரசியலில் நுழைந்து அவருக்கு வழிகாட்டடலாமே! (சுப்ரமணியன்; சின்னவேடம்பட்டி, கோவை—6).

கே. பாலசந்தர்: ஐயையோ! ரஜினிக்கு அரசியல்ல நுழையச் சொல்லி அறிவுரை ஏதும் சொல்லலை சார் நான்! ஆனா, டிஸ்கஸ் பண்ணும் போது ஒண்ணு மட்டும் சொன்னேன். மக்களுக்குச் சில கருத்துக்களைச் சொல்லணும்கிறபோது ரஜினியின் சூப்பர் ஸ்டார் என்கிற இமேஜ் உதவியாக இருக்கும் என்கிற கருத்தைத்தான் சொன்னேன். இன்றைய நிலையில் ஒரு கருத்தை பாலசந்தர் சொல்லுவதை விட, ரஜினிகாந்த் சொன்னால் அது மக்களிடையே ஈஸியா விலை போகும் என்பதுதான் என் எண்ணம்.

**கேள்வி (69):** தேன்மொழிப் பாத்திரத்தைப் படைக்க எப்போது எந்த சூழ்நிலையில் உங்களுக்குத் தோன்றியது? (சோம சுந்தரம், திருச்சி—5).

கே. பாலசந்தர்: அரசியல் நடப்புகளையும், பித்தலாட்டங்களையும் கணவன், மனைவிக்கு இடையில் ஒரு வீட்டுப் பிரச்னையாக ஆக்கினால் எப்படி இருக்குமென எண்ணிப் பார்த்த போதுதான் அச்சமில்லையின் கரு எனக்குத் தோன்றியது. ஒரு அண்டை மாநிலத்தில் நடந்த ஒரு சில அரசியல் சம்பவங்கள் அதற்கு இன்ஸ்பிரேஷனாகவும் அமைந்தன. நேர்மையான ஒரு மனைவி, நமக்கென்ன என்று இருந்துவிடத் தெரியாத ஒரு

## நேரம் நல்ல நேரம்

மனைவி, மனம் துருப்பிடிக்காத, கரப்ட் ஆகாத ஒரு பட்டிக்காட்டுப் பெண் எனக்குத் தேவைப்பட்டாள் தேன்மொழி வடிவில்.

**கேள்வி:** (எஸ். வி. ரமணன்) உங்களுடைய இந்தப் பாத்திரப்படைப்புக்கு ஒரு குறிப்பிட்ட வட்டார மொழியைத் தேர்ந்தெடுத்தது ஏன்?

கே. பாலசந்தர்: அதற்கு மிக முக்கிய காரணம் இருக்கு. அதாவது, கணவனும் மனைவியும் பட ஆரம்பத்திலே அந்த வட்டார மொழியில் பேசிக் கொள்வார்கள். அவங்க காதல் பண்ணிக்கறது கூட அந்த வட்டார மொழியில்தான். அதாவது அது அப்பாவித்தனத்தோட ஸிம்பல். திருமணமாகி, கணவன் அரசியல்ல சேர்ந்து, முன்னேறிக்கிட்டிருக்கிற போது இந்த வட்டார மொழியின் தனித்தன்மை மாறி, டவுன் மொழியில் பேச ஆரம்பிப்பதாய் நான் காட்டியிருக்கிறேன். மனைவி மட்டும் அதே வட்டார மொழியிலே பேசிக்கிட்டிருப்பா. கதாநாயகனின் மாரல் டிஸ்இன்டக்ரேஷனுக்கு அடையாளமா இந்த மொழி மாற்றத்தை நான் பயன்படுத்தியிருக்கேன்.

**கேள்வி (70):** நடிக நடிகையருக்கு ரிடையர்மென்ட்டே கிடையாதா? (சந்தான லக்ஷ்மி, திண்டுக்கல்).

கே. பாலசந்தர்: நடிக நடிகையருக்கு வயசே கிடையாது. அப்புறம் எங்கேயிருந்து ரிடையர்மென்ட் வரும்? மக்களின் ரசனை மாற்றத்துக்கேற்ப, தங்களையும் மாற்றிக் கொண்டு, காலத்திற்கேற்ப வேடங்களையும் மாற்றிக் கொண்டே போகிறவர்களுக்கு ரிடையர்மென்ட் ஏது? இந்தி நடிகர் அசோக்குமார் எப்பேற்பட்ட உதாரணம்!

**கேள்வி (71):** நடிப்பில் மின்னுவதைப் போல, டைரக்ஷனில் மின்னப் பெண்களால் முடியவில்லையே, ஏன்? (சிவசக்தி, நாகப்பட்டினம்).

கே. பாலசந்தர்: தமிழில் அப்படி யாரும் மின்னவில்லை என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால் தெலுங்கில் இன்னமும் விஜய நிர்மலா அவர்கள் வெற்றிகரமான இயக்குனராகப் பணி புரிந்து கொண்டுதான் இருக்கிறார். இந்தியில் சாய்பரஞ்பாய் இருக்கிறாரே!

தொகுப்பு: — மௌஷ்மி

• "தெலுங்கில் வெற்றி இயக்குனர்"



• "எப்பேற்பட்ட உதாரணம்!"



லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத் தலைவர்களின் படைப்பு

# விஐபி
# சேலஞ்சர்

புதிய, வடிவழகு விஐபி
சேலஞ்சர்...எல்லாம்
நிறைந்தது. கட்டுறுதியான
அலுமினியப் பட்டிகள்.
நம்பிக்கையான திருகு
பூட்டுக்கள். பக்கப் பூட்டுக்கான
பதிமானங்கள். பக்கப்
பேக்கெட்டுகள், பரந்த இடவசதி.
சுருக்கம் விழாதபடி அடக்கமிட
உதவும் உள் தடுப்புத் திரை.

கிடைத்தறியாத விலையம்.
பக்கத்திலுள்ள விஐபி
வியாபாரியிடம் பார்வையிடுவீர்
...சேலஞ்சர்.

## மதிப்பிலே மிஞ்சமுடியாதது! ஸ்டைலிலே ஈடிணையற்றது.




தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள். வருங்கால
யோக வரவுகளோ மேலும் பலப்பல.

LINTAS VIP M12 2012 TM

# ஜெரேனட்டர் ஜெனரேட்டர் ஆன கதை

பாபுஜி

'அக்பரென்ன அயர்ன் பாக்ஸையா கண்டார். ஹார்ஷருக்குத் தெரியுமா ஃப்ரிஜின் பெருமை' என்றெல்லாம் மனதைச் சமாதானப்படுத்திக் கொள்ளலாமென்றாலும் முடியவில்லை. குறிப்பாக ஃபேனின் சேவை அவசியம். தேவையாக இருந்தது. டிபன் வேளைகளில் விசிறிக் கொள்ள ஒரு சப்பாத்தி கிடைத்தால் கூடத் தேவலாம் என்று தேட வேண்டியதாகி விட்டது. இந்தத் தொல்லைகளிலிருந்து விடுபட ஒரு மினி ஜெனரேட்டர் வாங்கி விடுவது என்று எங்கள் வீட்டு நிர்வாகக் குழு கூடி முடிவெடுத்தது.

அண்ணாவின் செல்வாக்கினால் ஒரு மினி ஜெனரேட்டர்—கிருஷ்ணாயிலில் ஓடக் கூடியது வரவழைக்கப்பட்டு முன் ஹாலின் ஒரு மூலையில் அமர்த்தப்பட்டது. ஸ்விட்சைப் போட்டதும் அது கிளப்பிய சத்தம் வீட்டையே கிடுகிடுக்க வைத்தது. திருடனைத் தவிர வேறு யாரைப் பார்த்தாலும் குரைக்கும் எங்கள் வீட்டு சீசர் இந்தச் சத்தத்தைக் கேட்டதும் அலறியடித்துக் கொண்டு ஓடியதுதான். இன்று வரை வீடு திரும்பவில்லை.

ஜெனரேட்டரின் வரவினால் சில நன்மைகளும் தீமைகளும் ஒருங்கே ஏற்பட்டன. உதாரணமாக டீ.வி.யில் மொரார்ஜி ஜாக்கெட் அணிந்து கொண்டு ஏதோ ஒரு கான் ஷெனாய் வாசிப்பதைக் கேட்டே ஆகவேண்டியிருந்தது. சதா அறுக்க வரும் விருந்தினர்களை ஜெனரேட்டர் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துப் பேசும் போது—அவர்களின் பேச்சு கேட்காமல்—சைகைகளை மட்டும் வேடிக்கையாக ரசிக்க முடிந்தது. நல்ல நாளிலேயே என்ன சொன்னாலும் 'ஒன்ஸ் மோர்' கேட்கும் தாத்தா ஜெனரேட்டர் வந்த பின் இன்னும் மோசமாகி விட்டார். ''தாத்தா, சாப்பிட்டு விட்டீர்களா?'' என்று யாராவது கேட்டால், '''கல்கி' வியாழக்கிழமைதானே வரும்?'' என்று சிடுசிடுக்க ஆரம்பித்தார்.

இப்படியாக நாளொரு சத்தமும் பொழுதொரு இரைச்சலுமாக வளர்ந்து வந்த எங்கள் ஜெனரேட்டரின் வாழ்க்கையில் ஒரு கிளைமாக்ஸ். திடீரென்று ஒரு நாள் இமாலயக்



கூச்சல் போட ஆரம்பித்து விட்டது. எத்தனையோ தரம் எல்லாஸ்விட்ச்களையும் மூடி மூடித்திறந்து 'கைவைத்தியம்' செய்தபோதும் இரைச்சல் நின்றபாடில்லை. அக்கம் பக்கத்து வீட்டிலுள்ளவர்களெல்லாம் மிளகாய், கொத்தமல்லி, கோதுமை சகிதமாக வந்து ''வீட்டில் மாவு மெஷின் கூட வைத்து விட்டீர்களா? பலே,.. பலே...'' என்று பல்லைக் காட்டினார்கள். ட்யூப் லைட்டெல்லாம் மரத்திற்குப் பின்னால் ஒளிந்திருக்கும் தமிழ் பட கதாநாயகி மாதிரி கண்ணடிக்கத் தொடங்கின.

பொறுமையிழந்த தாத்தா ''யாராவது மெக்கானிக்கை அழைச்சிண்டு வந்து இந்த ஜெனரேட்டரை ரிப்பேர் பண்ணேண்டா'' என்று இரைந்தார். (வயதில் மூத்தவராக இருப்பதால் யாருக்கும் மரியாதையே தர மாட்டார். ஸ்க்ரூ டிரைவர், பட்டர் மில்க் போன்றவற்றைக் கூட முறையே ஸ்க்ரூ டிரைவன், பட்டன் மில்க் என்றுதான் அழைப்பார்!)

இரண்டாம் நாள் சூப்பர் அழுக்குடன் ஒரு மெக்கானிக் வந்து சேர்ந்தார். யாரையும் கண்டு கொள்ளாமல் 'மள மள' வென்று ஜெனரேட்டரைப் பிரித்துப் போட்டு இரண்டே நிமிஷத்தில் ஜெனரேட்டரை 'ஜெரேர்னட்ட' என்று கன்னாபின்னாவாக்கினார். மெதுவாக எங்களை நிமிர்ந்து பார்த்து ''ஒரு வாயகன்ற பாத்திரம் கொடுங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருள நாங்களும் உடன் தந்தோம். அதில் தளும்பத் தளும்ப கெரஸினை ஊற்றி அத்தனை உதிரிகளையும் அதில்கொட்டி ஊறவைத்துவிட்டுக்கையைத் துடைத்துக் கொண்டார். சாண்டில்யனின் கதாநாயகி மாதிரி லேசாக செருமி விட்டு ''ஜெனரேட்டர் சம்பந்தமா லிட்டரேச்சர் கொடுத்திருப்பாங்களே, இருக்கிறதா?'' என்று வினவ அதையும் உடனே தேடித் தந்தோம். அதை அகலமாகத் தரையில் விரித்துப் போட்டு இரு கைகளையும் கன்னத்தில் வைத்துக் கொண்டு சர்க்யூட்டை முறைக்கத் தொடங்கினார் மெக்கானிக்.

கெரசினில் உதிரிப் பாகங்கள் 'அம்போ' வென்று ஊறிக் கொண்டிருக்க, வெகு நேரம் கழித்து சுய நினைவுக்குத் திரும்பிய மெக்கானிக் அத்தனை பாகங்களையும் துடைத்து மறுபடியும் ஜெனரேட்டரை உருவாக்கி ஸ்டார்ட் செய்தார். முன்பிருந்ததை விட அரைக்கட்டை அதிகமாகவே கதற ஆரம்பித்தது.

''நான் மெசல் மெக்கானிக்தான். மோட்டார் ஓடறது. ஆனா 'பவர் சப்ளை' இல்லே. இதுக்கு எலக்ட்ரீஷியன் வந்து பார்த்தாத் தான் சரிப்படும்'' என்று கதைச் சுருக்கம் சொல்லி விட்டு இலவச இணைப்பாக ஒரு காபியும் சாப்பிட்டு விட்டு நடையைக் கட்டினார் அவர்.

இருநாள் கழித்து வந்த எலக்ட்ரீஷியன் மறுபடியும் ஜெனரேட்டரைக் கதற விட்டு விட்டுப் பாக்கெட்டிலிருந்து இளிப்பச்சை கலரில் ஒரு டெஸ்டரை எடுத்து ஆங்காங்கே தொட்டுப் பார்த்தார். ட்யூப் லைட்டுகள் படு வேகமாகக் கண்ணடித்தன.

''பவர் சப்ளை இருக்கே! எலக்ட்ரிகல் கோளாறு எதுவும் இல்லே. யாராவது டீசல் என்ஜின் சம்பந்தப்பட்ட மெக்கானிக்கிடம் காட்டுங்கள்'' என்று மொழிந்து விட்டு சத்தமில்லாமல் பெவிலியனுக்குத் திரும்பினார் எலக்ட்ரீஷியன்.

எரிச்சலடைந்த அண்ணா கம்பெனிக்கே நேரில் சென்று 'கன்னாபின்னா' வென்று சத்தம் போட, அவர்கள் அண்ணாவை சமாதானப்படுத்திய கையோடு டீசல் மெக்கானிக், எலக்ட்ரீஷியன் இரண்டு பேரையும் சேர்த்து அனுப்பி வைத்தார்கள். வீட்டிற்குள் நுழைந்த மறுகணம் இருவரும் மௌனமாக ஒருவரை ஒருவர் எரித்து விட்டு மெதுவாகக் கருத்தில் வேறு பட ஆரம்பித்து எங்களுக்குப் புரியாத டெக்னிகல் வார்த்தைகளால் திட்டிக் கொள்ளத் தொடங்கினார்கள். 'அனாவசியமான கைகலப்பைத் தவிர்க்கலாமே' என்ற நல்லெண்ணத்தில் அவர்களை உடனடியாக அனுப்பி வைத்தார் அண்ணா.

'இந்த ஜென் செட்டின் கதி அவ்வளவு தான்' என்று நாங்கள் முடிவு கட்டிய சமயத்தில்தான் ஆபத்பாந்தவனாக வந்து சேர்ந்தான் தூரத்து உறவினன் கிச்சாமி! ''அண்ணா ஜென் செட் லிட்டரேச்சரைக் கொடுங்கோ. நானும் லிட்டரேச்சர் படிச்சவன்தானே, ஏதாவது புரியறதா பார்க்கறேன்'' என்று கேட்டு வாங்கிப் படிக்க ஆரம்பித்தான்.

கிச்சாமியின் வருகையால் தொச்சுவைக் கண்ட மிஸஸ் அகஸ்தியனைப் போல் புளகாங்கிதம் அடைந்த பாட்டி மணக்க மணக்க காப்பி கொண்டு வருவதற்குள் 'யுரேகா... யுரேகா' என்று கத்தினான் கிச்சாமி. அனைவரும் அலறியடித்துக் கொண்டு ஹாலுக்கு ஓடி வர (மொட்டை மாடியில் 'சைட்' அடித்துக் கொண்டிருந்த கிட்டு உள்பட) தம்மாத்தூண்டு சைஸ் எழுத்தில் அச்சாகியிருந்த ஒரு வரியைச்சுட்டிக் காட்டினான் கிச்சாமி. 'இயக்குவதற்கு முன் சரியான சுழற்சி வேகத்தில் உள்ளதா என்பதை சரி பார்க்கவும்'.

''அண்ணா, வெரி சிம்பிள். ஆர்.பி.எம்மை அட்ஜஸ்ட் பண்ணனும். அவ்வளவேதான். தள்ளுங்கோ'' என்று எங்களைத் துச்சமென ஒதுக்கி விட்டு ஸ்க்ரூவில் எதையோ முடுக்கி மறுபடியும் ஸ்டார்ட் செய்தானே பார்க்கலாம். 'கட கட'வென வேகம் பிடித்து சீராக ஓடத் துவங்கியது. ஆறேழு ஆடி காரை வென்ற பெருமிதத்தோடு கிச்சாமி வெற்றிப் புன்னகை சிந்த, பாட்டி இன்னொரு காப்பி கலக்குவதற்காக சமையலறைக்குள் ஓடினாள்.

இப்போதெல்லாம் ஜெனரேட்டர் சமர்த்தாக ஓடிக் கொண்டிருக்கிறது. டீ. வி.யில் மொரார்ஜி ஜாக்கெட் போட்டகான் ஷெனாய் வாசிப்பதைப் பொறுமையுடன் கேட்கத் தொடங்கிவிட்டோம். தாத்தாவும், ''சௌக்கியமா?'' என்று விசாரிப்பவர்களிடம், ''மணி அஞ்சு பத்து'' என்று கர்ம சிரத்தையாகப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறார்!

## குஜராத் உள்துறை அமைச்சர் பேட்டி

குஜராத் மாநிலத் தலைநகரான காந்தி நகரில் அமைச்சர் அமர்சிங் சௌத்ரியின் பெரிய இல்லம். மரங்களடர்ந்த அமைதியான சூழ்நிலை. நுழைந்ததும் படத்தில் ராஜீவ் சிரித்துக் கொண்டிருந்தார்.

ரொம்ப சிம்பிளான அமைச்சரின் அறை. இன்டர்காமில் அடுத்த அரை மணி நேரத்துக்கு 'நோ போன் கால்ஸ்' என்று சொல்லிவிட்டு, பேட்டிக்குத் தயாரானர்.


அமைச்சர் அமர்சிங் சௌத்ரி

நிருபர்: இப்படிப்பட்ட இட ஒதுக்கீடு உயர்வு இப்போது ரொம்ப அவசியமா?

அமைச்சர்: இந்த இட ஒதுக்கீட்டு உயர்வு, திடீரென ஒருநாள் முடிவெடுத்து அறிவிக்கப் பட்டதல்ல. பல வருடங்களாக, பல்வேறு இனத்தவர்களும் தங்களையும் பிற்படுத்தப் பட்டவர்கள் பட்டியலில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென கோரிக்கை விடுத்துக் கொண்டிருந்தனர். அதன்படி, இது சம்பந்தமான முடிவுகளை வரையறை செய்ய ஜஸ்டிஸ் ரானே கமிஷன் அமைக்கப்பட்டது. அந்த கமிஷன் ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பித்து. பின் அதை அரசு பரிசீலனை செய்து, முடிவுகளை வெளியிட கணிசமான காலம் ஆகிவிட்டது. அந்த அறிக்கையில் மக்கள் தொகையில் பிற்படுத்தப்பட்டவர்களின் தொகைக் கேற்ற விகிதத்தில் இட ஒதுக்கீடு இருக்க வேண்டுமென சிபாரிசு செய்யப்பட்டிருந்தது. எனவே ஒதுக்கீட்டை 10 சதவீதத்திலிருந்து 28 சதவீதமாக உயர்த்தினேம்.

நிருபர்: (ரிசர்வேஷன் எதிர்ப்பாளர்கள் கொடுத்த புள்ளி விவரங்களை எடுத்துத் தந்து) இதன்படி பார்த்தால், கடந்த இரண்டு வருடங்களாக ஒதுக்கீடு செய்யப்பட்ட இடங்களில் ஏறத்தாழ பாதி சேர ஆளில்லாமல் காலியாக இருந்திருக்கிறது. அதே சமயம், ஃபார்வர்டு கோட்டாவிலோ அதிக மார்க் வாங்கின மாணவர்களுக்குக் கூட இடமில்லை என்கிற நிலே. இந்தச் சூழ்நிலையில் இட ஒதுக்கீடு உயர்வு அவசியம்தானு?

அமைச்சர்: இது கடந்த இரண்டு வருடத்துப் புள்ளி விவரம் தானே? எப்போதுமே இப்படி இருக்கும் என்று எப்படி சொல்வது? இட ஒதுக்கீட்டு வாய்ப்பை, சம்பந்தபட்டவர்கள் பயன்படுத்திக் கொள்ளாத சூழ்நிலையில், அந்த இடங்களை அவர்கள் பயன்படுத்திக் கொள்வதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமே தவிர அவற்றை அடுத்தவர்களுக்குக் கொடுத்து விடுவது எப்படி நியாயமாகும்? தவிர, மேலும் பல ஜாதிகளைப் பிற்படுத்தப்பட்டவர் பட்டியலில் சேர்க்கவிருக்கிறேம்.

நிருபர்: ஒரு வருடத்தில் பூர்த்தியாகாத இடங்களை, மறு வருட ஒதுக்கீட்டு இடங்களுடன் சேர்த்துக் கொள்கிறீர்களே! அப்படிச் செய்தால், முழுக்க முழுக்க எல்லா இடங்களுமே 'ஒதுக்கீடு கோட்டா' வாகி விடுகிற நிலே வராதா?

அமைச்சர்: தொழிற்கல்லூரிகளில் இந்த முறை கடைப்பிடிக்கப் படுவதில்லை. அரசாங்க அலுவலகங்களில் பதவி உயர்வுக்குத்தான். அதுகூட எஸ். டி. பிரிவினருக்குத்தான் நடந்து வருகிறது. மற்றவற்றில் பிரச்னையே வருவதில்லை. அதுவும் மூனு வருஷங்களுக்குத்தான் 'கேரி ஓவர்' செய்ய முடியும்.

நிருபர்: இட ஒதுக்கீட்டு எதிர்ப்புக் கிளர்ச்சியாக ஆரம்பித்தது. போலீஸுக்கும், பொது மக்களுக்கும் இடையிலான மோதலாய் மாறினது எப்படி?

அமைச்சர்: பொதுவாகவே குஜராத்தில் தகராறு என்ருல் பொதுமக்களின் முதல் குறி போலீஸ்தான். இப்போதும் அப்படித்தான். பாரதீய ஜனதா கட்சிதான் கிளர்ச்சியைத் தூண்டிவிட்டதே. உயர் நீதி மன்றம் நியமித்த கமிஷன், பல்வேறு இடங்களையும்

# "பட்டம் விடும் போட்டி மதக் கலவரமாய் மாறும்!"

பார்வையிட்டு, கலவரப் பாதிப்பு பற்றி அறிகிற பணியில் ஈடுபட்டிருந்த போது, உடன் சென்ற போலீஸ்காரர் ஒருவர் கிளர்ச்சிக் காரர்களால் கொல்லப்பட்டார். இது போலீஸ் இலாக்காவையே உசுப்பி விட்டது. இதற்கிடையில் இறந்த போலீஸ்காரரின் சவ ஊர்வலத்தில் கலந்து கொள்ள எல்லாப் போலீஸ்காரர்களும் சென்று விட்ட சமயத்தை, சமூக விரோதிகள் தமக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொண்டு விட்டனர்.

நிருபர்: நீங்கள் போலீஸை விட்டுக் கொடுக்காமல் என்ன பரிந்து பேசினாலும் சரி! போலீஸ்காரர்கள் அத்து மீறித்தான் நடந்து கொண்டிருக்கிறார்கள்! பெண்களிடம் தகாத முறையில் செயல்பட்டிருக்கிறார்கள்! இதை உங்களால் மறுக்க முடியுமா?

அமைச்சர்: எங்கோ சில போலீஸ்காரர்கள் சுய கட்டுப்பாட்டை இழந்து, பெண்களிடம் தவறாக நடந்து கொண்டிருக்கலாம். அது பற்றி விசாரித்து, உண்மையை அறிந்து சம்பந்தப்பட்டவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும். ஆனாலும் செய்தித்தாள்கள் நிறையவே பொய் சொல்லுகின்றன. எந்த போலீஸ்காரராவது, தன் துணிகளைக் களைந்து விட்டு, தெருவில் நடப்பாரா? பெண்களை அழைப்பாரா? இது பயித்தியக்காரன் செய்கிற காரியமில்லையா?

நிருபர்: குஜராத் சமாச்சார் கொளுத்தப்பட்டது பற்றியும், நிருபர்கள் தாக்கப்பட்டது பற்றியும் என்ன சொல்கிறீர்கள்?

* கலவரத்தில் ஏற்பட்ட அழிவு



''தண்ணீர் கஷ்டமாம்; வெய்யில் கொளுத்துதாம்; பேசிக்கிறா. எனக்கென்னமோ ஜில்லுன்னு ஜாலியாத்தானே இருக்கு?''

மேலட்டை: வண்ணப் படம்: ஏ.வி. பாஸ்கர்

அமைச்சர்: பத்திரிகை நிருபர்கள் தாக்கப்பட்டது குறித்து, உடனேயே வருத்தம் தெரிவித்து விட்டார் முதல்வர். முதல்வர் மீது உள்ள தனிப்பட்ட விரோதம் காரணமாய் குஜராத் சமாச்சார் நிறைய பொய்களைப் பிரசுரித்தது. தீ வைப்பு சம்பவம் நிகழ்ந்ததும், இறந்த போலீஸ்காரரின் சவ அடக்க சமயத்தில்தான்: போலீஸ்காரர்களின் செயல்தான் இது என்று பத்திரிகைகளில் எழுதப்பட்டாலும், குஜராத் சமாச்சார் நிர்வாகம் 'போலீஸ்தான் செய்தது' என்று புகார் செய்யவில்லையே!

நிருபர்: கிளர்ச்சி எப்படி இந்து—முஸ்லீம் மோதலாக மாறியது?

அமைச்சர்: அகமதாபாத் எப்போதுமே மத விஷயத்தில் ரொம்ப சென்ஸிடிவ் ஏரியா. இந்து—முஸ்லீம் மோதல்கள் அடிக்கடி நிகழும். இதற்கெல்லாம் பெரிய காரணங்கள் வேண்டுமென்றே அவசியமில்லை. ஒரு சிறு 'பொறி' போதும். காற்றாடி விடுவதில் ஏற்படும் போட்டி கூட மதக் கலவரமாய் மாறுவது சகஜம். குஜராத் பந்த் தினத்தன்று மாலை கிளர்ச்சிக்காரர்கள் குஜராத் அரசாங்கத்துக்குச் சாவு மணியடித்துக் கொண்டு ஊர்வலம் நடத்தினார்கள். ஊர்வலம் இந்து—முஸ்லீம் மிகுதியாய் வாழும் பகுதியைக் கடக்கும் போது வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் மீதோ, ஊர்வலத்தில் போய்க் கொண்டிருந்தவர்கள் மீதோ கல் எறியப்பட்டதைத் தொடர்ந்து மதக் கலவரம் மூண்டது.

நிருபர்: பிரச்னைக்குத் தீர்வு காண நீங்கள் எடுத்துள்ள உடனடி நடவடிக்கை என்ன? நீண்ட கால நடவடிக்கை என்ன?

அமைச்சர்: கிளர்ச்சியும், அதைத்தொடர்ந்து வன்முறைகளும் நடந்ததால், ஒதுக்கீடு உயர்வைத் தள்ளிப் போட்டு விட்டோம். மத்திய அரசு கூட, இந்த விஷயத்தில், தேசிய அளவில் ஒரு முடிவு எடுக்கப்படும் வரை, மாநிலங்களைத் தாமாக ஒதுக்கீடு உயர்வுகளைச் செயல்படுத்த வேண்டாம் என்று சொல்லி விட்டதே!

எஸ். சந்திரமௌலி

# சூரியன் இருக்க பவர் கட் எதற்கு?



நிலைக் கண்ணாடியை சரியான அளவுக்கு வெட்டு கிறார் நிபுணர்

சூரியனின் ஒளிக் கதிர்களைப் பயன் படுத்தி மின்சாரம் தயாரிக்கலாம் என்பது நீண்டகாலமாகவே ஆலோசிக்கப்பட்டு வருகிற விஷயம்தான். ஆனால் பரீட்சார்த்தமான முறையிலன்றி வியாபார லாப நோக்கில் உலகிலேயே முதன் முதலாக ஒரு நிலையம் உருவாகி வருகிறது. எங்கே? அமெரிக்காவில் மொஜேவ் பாலைவனத்தில்!

இங்கே மிகப் பெரிய பரப்பளவு (80,000 சதுர மீட்டர்) சூரிய ஒளி பட்டு தகதகத்துக் கொண்டிருக்கிறது. பளபளப்புக்குக் காரணம், ஆயிரக்கணக்கான நிலைக் கண்ணாடிகள் பதிக்கப் பெற்றிருப்பதுதான். இது முதல் கட்டமே.

இந்தப் பவர் ஸ்டேஷன் 45 மெகாவாட் மின்சாரம் உற்பத்தி செய்யும் போது-2,40,000 சதுர மீட்டர் பரப்பளவுக்கு நிலைக் கண்ணாடி பதிக்கப்பட்டிருக்கும்!

சூரிய ஒளியைப் பிரதிபலிக்கும் இந்த நிலைக் கண்ணாடிகள், சர்ப்புக் குழல் மீது சூரிய ஒளியைப் பாய்ச்சுகின்றன. சர்ப்புக் குழல் சூரிய வெப்பத்தை வாங்கி உள்ளே இருக்கும் விசேஷ ரக எண்ணெயைச் சூடாக்குகிறது. இதன் விளைவாக உருவாகும் வாயு டர்போ ஜெனரேட்டர்களை இயக்குகிறது. ஜெனரேட்டர்கள் மின்சாரம் உற்பத்தி செய்கின்றன.

அடிப்படையில் மிக எளிமையாகத் தோன்றினாலும் இந்த ஆராய்ச்சிக்குக் கோடிக் கணக்கான டாலர்களைச் செலவிட்டிருக்கிறது. அமெரிக்கா.

இதற்குத் தேவைப்பட்ட பல்லாயிரக் கணக்கான நிலைக் கண்ணாடிகள் மேற்கு ஜெர்மனியில் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டு அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்டன.

சூரிய ஒளியிலிருந்து மின்சாரம் தயாரிப்பது சாத்தியமாகிவிட்டால் இரண்டு மிகப் பெரிய அனுகூலங்கள். முதலாவது நிலக்கரி அல்லது பெட்ரோலியம் எண்ணெய் உபயோகிக்கும் அனல்மின் நிலையங்களும், அணுமின் நிலையங்களும் சுற்றுச் சூழலை நச்சு மயமாக்குகிற ஆபத்து உண்டல்லவா? அது தவிர்க்கப்படும். இரண்டாவது, 'மழை இன்மையால் நீர் மின் நிலையம் இயங்கவில்லை; நிலக்கரி, பெட்ரோலியம் தட்டுப்பாட்டால் அனல்மின் நிலையம் இயங்கவில்லை என்பது போன்ற பிரச்னைகள் இராது.

வர்த்தக ரீதியிலேயே இப்போது அமெரிக்காவில் சூரிய ஒளியைப் பயன்படுத்தி மின் உற்பத்தி ஆரம்பிக்கப்பட்டிருப்பதால் அதன் உற்பத்தி செலவையும் ஒரு கட்டுக்குள் அடக்கக் கற்றுக் கொண்டு விட்டார்கள் என்றே நம்பலாம்.

ஆதாரம்: **ஸ்காலா**

80,000 சதுர மீட்டர் பரப்பளவில் தகதகக்கும் நிலைக் கண்ணாடிகள்



**Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)**

**Assistant Editor: P. S. Mani** **Editor: K. Rajendran**



# அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது.

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. மூன்று விதங்களில் செயல்படுகிறது.

- வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.
- சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.
- சருமத்தை குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
1/75